KALKI 19.10.86 ரூ. 1.50

# கல்கி

மரங்களை வெட்டுவோம்;
பாக்கெட்டை நிரப்புவோம்!

"பஸ் வரணும்னு
இடைத்தேர்தல்
வரணும்!"

காமராஜர்
மாவட்டத்தில் கல்வி — II

சாரதா'ஸின் புதிய டிசைன்களிலே அவள்!



# "பஸ் வரணும்னா இடைத்தேர்தல் வரணும்!"



• சுப்பையா



• ஆரம்பப் பள்ளியின் அவலம்!



• செல்வராஜ்

ஊரின் பெயரோடு இனிஷியலையும் சேர்த்துக் கொண்டிருக்கிறது எம். துரைசாமிபுரம்.

''எம். துரைசாமிபுரத்துக்கு எந்த பஸ்ல போகலாங்க?''

''எலெக்ஷன் முடிஞ்சு போச்சே...'' என்று பதில் வந்தது.

''எலெக்ஷனுக்கும் பஸ்ஸுக்கும் என்னங்க சம்பந்தம்?''

''ஊர்ல போய்க் கேளுங்க, சொல்வாங்க... மாரனேரி வரைக்கும்தான் பஸ் இருக்கு... அப்புறம் நடக்கணும்...''

எம். துரைசாமிபுரத்தில் நுழைபாதையே கமகமவென்று வரவேற்றது. பொதுக் கழிப்பிடம் இல்லாத குறை. பாதையின் இருமருங்கும் கிராமத்தின் மண் வாசத்தை விட மல வாசம்தான் தூக்கியடித்தது.

ஓடுகள் அவிழ்ந்து விழுந்த ஒரு கட்டடம்; அங்கங்கே சுவரில் விரிசல்கள்; ஊரின் ஆரம்பப் பள்ளிக்கூடம்! ஐந்தாம் வகுப்பு வரை பாடங்கள். ஆனால், ஆசிரியர்களென்னவோ நான்கு பேர்தான். ஸ்கூலுக்குச் சற்றுத் தள்ளி நாலு கான்கிரீட்(?) தூண்கள். தண்ணீர்த் தொட்டி கட்டுவதாக வாக்களித்துத் தேர்தல் நேரத்தில் எழுப்பப்பட்டவை. வாக்குறுதியைப் போலவே இன்றளவும் மொட்டையாய் நிற்கின்றன.

இதுவாவது பரவாயில்லை. குதிரைக்குக் காட்டும் காரட் போல் இன்னொரு சமாசாரத்தையும் அரசியல்வாதிகள் கண்டு கொண்டார்கள். ஊர் மக்களின் வெகுநாள் கனவு ஊருக்குக் குறைந்தபட்சம் ஒரு பஸ். கிட்டத்தட்ட மூன்று வருஷங்களுக்கு முன்பு ஒரு பஸ் வந்தது. 'இருக்கன்குடி to துரைசாமிபுரம்' என்று போர்டு மாட்டிய பி. ஆர். சி. பஸ். சில மாதங்களில் மழை. பஸ்ஸின் டயர்கள் ஊரை மிதிக்க மறந்து போயின. 'என்ன ஏது' என்று விசாரித்தால், ''பாதை சரியில்லே. ஊராம்பட்டி அருகே பாலம் சேதமாகிவிட்டது. ரிப்பேர் செய்ததும் பஸ் வரும்..'' என்று சாத்தூர் பி. ஆர். சி. மேலாளர் உறுதி கொடுத்தார். அத்தோடு மறந்தார்.

85 ஆம் வருடம், ஜனவரி. சட்டமன்றத் தேர்தல் அறிவிப்பு. கும்பிட்ட கைகளுடன், அரசியல்வாதிகளின் ஊர்வலம். ஊர் மக்கள் உஷாரானார்கள். ''எங்களுக்கு பஸ்?'' கேட்டதுதான் தாமதம். மந்திரம் போட்டது போல், எந்த ரோடு சரியில்லே என்றார்களோ அந்தப் பாதையிலேயே மறுபடியும் பஸ் வரத் தொடங்கியது. ஊர் மக்களுக்கு ஏகக் கொண்டாட்டம்.

''இனிமே ஊருக்கு எப்பவும் பஸ் வரும்னு



* பாதியில் நிற்கும் மேல்நிலை நீர்த் தொட்டி.

நம்பித்தான் ஓட்டுப் போட்டோம்...'' என்றார் சுப்பையா. முகத்தில் ஏமாற்றம், சிறிது சலிப்பு. ''ஆனா, பஸ் எண்ணி நாற்பது நாள் வந்தது. தேர்தல் முடிவு தெரிஞ்ச அடுத்த நாளே பஸ் வரலே. நின்னு போச்சு. இடையன்குளம் வரை நடந்து போய்த்தான் பஸ் பிடிக்கணும்!''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன, அடுத்த எலெக்‌ஷன் வரட்டும்னு காத்துக்கிட்டிருந்தோம். பஞ்சாயத்து எலெக்‌ஷன் வந்தது. தேர்தல் அறிவிப்பு வந்த அடுத்த நாளே மாற்றுப் பாதையில இடையன்குளம் வழியா பஸ் வர ஆரம்பிச்சது. 'வாக்காளப் பெருமக்களே, பஸ் இனிமேல் தினமும் வரும்' அப்படீன்னு உறுதி கொடுத்தாங்க... தேர்தல் முடிஞ்சு முடிவு தெரிய, சரியா 22 நாள். அந்த 22 நாள் மட்டும்தான் பஸ் வந்தது. அப்புறம் நின்னு போச்சு...''

''பி. ஆர். சி. மேனேஜரிடம் நீங்கள் போய்க் கேட்பதுதானே?''

''கேட்டோமே'' என்றார் செல்வராஜ். ''விளாம்பட்டி, இடையன்குளம் வழியா பஸ் விட எங்களுக்கு ரூட் பர்மிட் இல்லேன்னு ஒரே அடியா அடிச்சிட்டாரு... தேர்தல் நேரத்தில மட்டும் எப்படி பர்மிஷன் கெடைச்சுது, சார், நீங்களே சொல்லுங்க. இப்ப சமீபத்தில அருப்புக் கோட்டைல இடைத் தேர்தல் வந்ததே, அப்பக் கூட ஆகஸ்ட் 29, 30, 31 மூணு தேதியும் திடீர்னு பஸ் வந்தது. காலேல ஓட்டுப் பதிவு முடிஞ்சதும், மாலேல வர வேண்டிய பஸ்ஸே வரலேன்னு பாத்துக்குங்களேன்...''

அம்மாப்பட்டியைச் சேர்ந்த ராமகிருஷ்ணன் என்பவர் இதற்காக விளாம்பட்டி அருகே மறியல் போராட்டம் கூட நடத்தினாராம். பலனில்லே. ஆனாலும் இந்த மக்கள் நம்பிக்கையை இழந்து விடவில்லே.

''இன்னொரு இடைத் தேர்தல் வருதாம் சார். ஹண்டே எங்க தொகுதில நிக்கப்போறாராம். எலெக்‌ஷனுக்கு முன்னால எப்படியும் ரோடையெல்லாம் ரிப்பேர் பண்ணிடுவாங்க, பஸ் விடுவாங்க... அந்தத் தேர்தல் அறிவிப்பை எதிர்பார்த்துத்தான் காத்திருக்கோம்...'' என்றார்கள்.

பாவம் அந்த ஊர் மக்கள்! அரசியல்வாதிகளை இன்னமும் புரிந்து கொள்ளாதிருக்கிறார்கள்!

காமராஜர் மாவட்டம் புகைப் படங்கள் மேலட்டை வண்ணப் படங்கள் :

**கே. வி. ஆனந்த்**

நேரில் சென்று தகவல்கள் சேகரித்துக் கட்டுரை வடிவம் தந்தவர்கள் :

**சுரேஷ் — பாலா**

---

## அடுத்த இதழில்...

தொழிலதிபர் ஜே. ஆர். டி. டாடா —
சிறப்புப் பேட்டி!





# இந்தக் காந்தி போராடுவது எதற்காக?

தமிழ்நாடு வழக்கறிஞர்கள் சம்மேளனத்தின் தலைவர் காந்தியிடம், ''வழக்கறிஞர்களே இப்படி நேரடிப் போராட்டங்களில் இறங்கி, நீதிமன்றங்களைப் புறக்கணிக்கலாமா? மக்களுக்கு இதனால் எவ்வளவு கஷ்டம்?'' என்று முதல் கேள்வியைத் தொடுத்தோம். இரண்டாவதாக, ''எதற்காக இந்தப் போராட்டம்?'' என்று வினவினோம். காந்தி இரண்டாவது கேள்விக்கு முதலில் பதில் சொன்னார்:

''தமிழ்நாட்டில் உள்ள இரண்டாம் நிலை முதல்நிலை, மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுகளிலும், மாவட்ட முன்சீப் கோர்ட்டுகளிலும் உள்ள மாஜிஸ்ட்ரேட், முன்சீப் பதவிகளுக்கான தேர்வு, சர்வீஸ் கமிஷன் மூலம்தான் நடைபெற வேண்டும். அந்தத் தேர்வின் அடிப்படையில் நூறு காலியிடங்கள் இருந்தால் அறுபது இடங்களில், வழக்கறிஞர்களுக்கு வாய்ப்புத் தர வேண்டும். ஆனால், தமிழ்நாட்டில் கடந்த இருபத்தொரு ஆண்டுகளாக இந்தப் பதவிகளுக்கான சர்வீஸ் கமிஷன் தேர்வு ஏதும் நடந்ததே இல்லை. அரசாங்கப் பதவிகளில், நர்ஸ், மிருக வைத்தியர், புள்ளி விவரத் துறையில் இருப்பவர் என்று பல தரப்பினரும் சட்டம் படித்திருந்த ஒரே காரணத்தால் பதவி மாற்றம் பெற்று இரண்டாம் நிலை மாஜிஸ்ட்ரேட்களாக வந்து இருக்கிறார்கள்.

ஓர் அவசரத்துக்குச் சட்டம் படித்த இந்த நபர்களை மாஜிஸ்ட்ரேட்களாக நியமிக்கலாம் என்று அரசாங்கம் சொன்னவுடன் ஹைகோர்ட்டும் ஒப்புக் கொண்டது. இப்படி தற்காலிகமாக வந்த இந்த மாஜிஸ்ட்ரேட்கள், இரண்டாம் நிலையிலிருந்து முதல் நிலைக்கு மாறி, பின்னர் மாவட்ட முன்சீப்பாகவும் இருக்கிறார்கள். இப்படியாக 260 பேர் இப்பதவிகளில் இருக்கிறார்கள். ஏன், இப்போது உயர்நீதிமன்ற மரபுகளைக் கூடப் புறக்கணித்துச் சட்டத்துறைச் செயலாளரை நீதிபதியாக்க அரசு முயன்று வருகிறது! எங்கள் பார் கவுன்ஸில் 1981 இல் வழக்குத் தொடர்ந்து அரசாங்க ஊழியத்தில் இருந்து இப்படிப் பதவி மாறி வந்தவர்களை நிரந்தரம் செய்யக் கூடாது என்று கோரிக்கை வைத்தது. நீதிமன்றமும் அரசுக்கு நான்கு மாதம் அவகாசம் கொடுத்து சட்டப்படி எப்படித் தேர்வு செய்ய வேண்டுமோ அப்படி உடனடியாக மாஜிஸ்ட்ரேட்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று உத்தரவிட்டது.

''ஆனால் நீதிமன்றத்தில் ஒரு வருடம் அவகாசம் கேட்டு வாங்கிக் கொண்டது தமிழக அரசு. அப்புறமாவது கடமையைச் செய்தார்களா? இல்லை... ஆகவேதான் நான் சுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதிக்குக் கடிதம் எழுதினேன். அதை 'ரிட்' மனுவாகவே எடுத்துக் கொண்டு, வழக்கறிஞர்கள் சங்கம், தமிழக அரசு, பார் கவுன்ஸில், மத்திய அரசு ஆகியவைகளோடு கலந்து பேசி, ''இரண்டாம் நிலை மாஜிஸ்ட்ரேட் பதவியிலிருப்பவர்களை மட்டும் நிரந்தரம் செய்யுங்கள்; மற்ற காலியிடங்களுக்கு விதிப்படி ஆட்களை நியமியுங்கள்'' என்று சுப்ரீம் கோர்ட் சொன்னது. ஆனால் சுப்ரீம் கோர்ட் ஆணையைக் கூட கேட்கமாட்டேனென்கிறது தமிழக அரசு. அரசாங்கப் பொறுப்பிலிருந்து மாறி வந்த மாஜிஸ்ட்ரேட்கள் சங்கம், சுப்ரீம் கோர்ட்டின் இந்தத் தீர்ப்பை மறுபரிசிலனை செய்யச் சொல்லி மனு செய்திருக்கிறது. ஆனால் நியாயம் எங்கள் பக்கம்தான் என்று சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்புச் சொல்லும் என்பதில் எங்களுக்குத் துளியும் சந்தேகமில்லை'' என்று முடித்த காந்தி, ''இனி உங்களுடைய முதல் கேள்விக்கு வருகிறேன்'' என்று கூறி தொடர்ந்தார்:

''எங்கள் போராட்டத்தில் பொது மக்களுக்கு பாதிப்பு ஏற்படத்தான் செய்யும். குறைந்த அளவில்தான் பாதிப்பு ஏற்படும். ஏனென்றால், நாங்கள் நீதிமன்றத்தைப் புறக்கணிக்கும் நாட்களில் விடுமுறைக் கால கோர்ட்டுகள் மட்டுமே இயங்கும். எங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்க இதுவே சரியான சமயம் என்றே இந்தத் தருணத்தைத் தேர்ந்தெடுத்தோம்.''

தமிழ்நாடு முழுவதும் உள்ள கோர்ட்டுகளில் தற்போது 126 மாவட்ட முன்சீப் பதவிகளும், ஒன்பது மாவட்ட நீதிபதி பதவிகளும், ஏழு துணை நீதிபதி பதவிகளும், ஹைகோர்ட்டில் ஐந்து நீதிபதி பதவிகளும் மற்றும் நூற்றுக்கும் மேற்பட்ட மாஜிஸ்ட்ரேட் பதவிகளும் காலியாக இருக்கின்றன. இருபதாயிரம் வழக்கறிஞர்கள் ஒன்று திரண்டு போராட்டத்தில் இறங்கி இருக்கிறார்கள். இவர்களின் குரல் தமிழக அரசின் தூக்கத்தைப் போக்குமா?

— ப்ரியன்

# உடைவதற்காகவே கட்டப்பட்ட கண்மாய்!

• பொன்னுச்சாமி.



• முடிந்தும் முடியாத புதுக் கண்மாய்.



“டிரைவர், அடுத்து நாம மேலாண்மறை நாடு போகிறோம்...

“இந்த மழையிலா?”

“மெதுவா உருட்டிட்டுப் போயிடுங்க.”

செம்மண் பாதை. அங்கங்கே தேங்கி நிற்கும் தண்ணீர். ஐந்தடிக்கு மேல் பார்வை ஊடுருவ முடியாதபடி அடர்த்தி மழை. டிரைவர் பொறுமைசாலி. காரை உருட்டினார். அங்கங்கே நிறுத்தித் தண்ணீரில் இறங்கி ஆழம் பார்த்து விட்டு, அந்த இடத்தை வண்டியில் கடந்தோம்.

வலையப்பட்டி தாண்டியதும், சற்று சிக்கலான பாதை. மழையில் வேகமாக நடந்து கொண்டிருந்த இளைஞரைக் கூப்பிட்டோம். வழி கேட்டோம்.

“இந்தா தெரியுதில்ல, இப்படியே நேராப் போய் வயத்தூடத்தில போனீங்கன்னா மேலாண்மறை.”

“கார் போகுமா?”

“தலைகீழாப் போகுமுங்க” என்றார் அடித்து.

சேறுகிக் கிடந்த அந்தப் பாதையில் கார் வழுக்கி வழுக்கி நகர்ந்தது. சரிவுகளில் சமாளித்தது. (நல்ல வேளை, தலைகீழாகி விடவில்லை.)

மேலாண்மறை நாடை அண்டிவிட்டோம். ஊருக்குள் வண்டி நுழைய முடியாதபடி காட்டோடை வெள்ளப் பெருக்கு. சைக்கிள் உயரத்திற்கு நீர். இடுப்பு வரை நனைந்து கொண்டே நுழைந்தோம்.

“பொன்னுச்சாமி, உங்களைத் தேடிக்கிட்டு கல்கிலேர்ந்து வந்திருக்காங்க.”

“வாங்க” என்றார் பொன்னுச்சாமி.

ஊரில் நுழைந்தவுடன் இடதுபுறம் இருந்த சேரியின் வழியே அழைத்துச் சென்றார். சேரியைச் சுற்றியிருந்த தடத்தில் தண்ணீர்ப் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது.

“இன்னும் ரெண்டு மழை இப்படிப் பெய்ஞ்சா, காட்டாறு சேரியையே அடிச்சிட்டுப் போயிடும். இங்க ஒரு தடுப்புச் சுவர் கட்டச் சொல்லி கேட்டிட்டிருக்கோம்... முக்கியமா நீங்க பார்க்க வேண்டியது கண்மாய் தான்.”

“எந்தக் கண்மாய்?”

“மொத்தம் ரெண்டு கண்மாய்ங்க. உடை கண்மாயைப் பத்தி மொதல்ல சொல்றேன்...”

“என்னது? உடை கண்மாயா?”

“ஆமாங்க... ஒன்பது வருஷத்துக்கு முன்னால ஊருக்கு மேற்கே ஒரு கண்மாய் கட்டினாங்க... ஒவ்வொரு மழையிலும் அந்தக் கண்மாய் உடைஞ்சிடும்... உடனே வந்து அடைக்க மாட்டாங்க... அது மேல மேல உடைஞ்சு, சேதம் பெரிசானப்புறம் வந்து மராமத்து வேலை செய்வாங்க... அடுத்த வருஷமும் முன் யோசனையோட முதல்லயே சரிப்படுத்தாம விட்டுடுவாங்க... மறுபடியும் வேற இடத்தில உடையும்... வருஷா வருஷம் உடையறதால உடை கண்மாய்னு பேரே வந்திடிச்சு. அந்தக் கண்மாய்னால அரசாங்கத்துக்கு வருஷா வருஷம் செலவு. எங்க ஊருக்கு எந்த லாபமுமில்ல...”

“இன்னொரு கண்மாய்?”

“அது சுவாரஸ்யமான கதை. எட்டுலட்சம் ரூபாய் செலவு பண்ணி புதுசா ஒரு கண்மாய் கட்டினாங்க... ஆனா முடிக்க முடியலே. ஒரு சின்னத் தகராறு... வாங்களேன், போய்ப் பார்ப்போம்.”

“புதுக் கண்மாய்ல என்ன தகராறு?” என்றோம் நடந்து கொண்டே.

“கண்மாய் கட்டறப்போ குறிப்பிட்ட ஒருத்தரோட ஆறு ஏக்கர் நிலம் அதில் மாட்டிச்சி. அவர் தன் நிலத்தைத் தர மறுத்தாரு. அப்புறம் ஒரு வழியா சமாதானம் செய்ஞ்சு டிபார்ட்மெண்டோட ஓர் உடன்படிக்கைக்கு வந்தாரு.. அவருக்கே இன்னொர் இடத்திலுள்ள அரை ஏக்கராவது ஆயக்கட்டில வரும்படி அரசாங்கம் கால்வாய் வெட்டித் தரணும்னு உடன்பாடு... ஆனா அதிகாரிங்க கொடுத்த வாக்கை மீறிட்டாங்க. கால்வாய் கட்ட வழியில்லாம போச்சு... அதனால நிலத்துச் சொந்தக்காரர் மறுபடியும் தகராறு பண்ணி வேலை அப்படியே ஆறு மாசமா நின்னு போச்சு... அந்தக் கண்மாய்க்கு என்னிக்கு வாழ்வு வரப் போகுதோ தெரியலே...”

‘தேர்தல் நேரத்தில் மட்டுமில்லே, எப்போது வாக்குறுதி கொடுத்தாலும் மீறுவது எங்கள் கொள்கை’ என்று அரசு மார் தட்டுவதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது அரைகுறையாக வேலை நின்று போன புதுக் கண்மாய்.







காதலின் ஆழ்ந்த உணர்வுகளுக்குத் தொடர்கதை வடிவம் தருகிறார் உஷா சுப்பிரமணியன்:

# மோகம் என்பது இதுதானோ?





பாசத்தின் தளிர் உணர்வுகளுக்குத் தொடர்கதை வடிவம் தருபவர் சுபா:

# சின்னச் சின்ன கனவுகள்

## பரபரப்பான முழு நீள நாடகம்

அதிக பக்கங்கள்: : அதே விலை!

# அழிக்கப்படும் அழகிய அணில்!



• கே. ராமச்சந்திரன்



படத்தில் காணப்படும் அழகான அணிலை (**Giant grizzled squirrel – Ratufa Macroura**) ஸ்ரீலங்காவிலும் இந்தியாவிலும் மட்டுமே பார்க்கலாம். அதிலும், இந்தியாவில் அதனைப் பார்க்க வேண்டுமானால் காமராஜர் மாவட்டத்துக்குத்தான் நீங்கள் வர வேண்டும். ஸ்ரீவில்லிபுத்தூர் மற்றும் ராஜபாளையத்தின் சுற்றுப்புறங்களிலும், அழகர் கோயில் காடுகளிலும் மட்டுமே இவ்வகை அணில்கள் வசிக்கின்றன. காமராஜர் மாவட்டத்தின் இந்த அரிய பொக்கிஷம் வெகு வேகமாக அழிந்து வருகிறது என்பது வருந்த வைக்கும் உண்மை. மிஞ்சிப் போனால் இன்னும் நூறு அணில்களே பாக்கியிருக்கலாம் என வனவிலங்கு வல்லுனர்கள் கணக்கிட்டுக் கூறுகின்றனர்.

சாம்பல் நிற உடல்; மூக்கும் உதடுகளும் மட்டும் செக்கச் செவேல்; இரு தோள்களிலும் முன் நெற்றியிலும் தொப்பி அணிந்தாற் போன்ற கறுப்புத் திட்டுக்கள்; அன்றாடம் நாம் பார்க்கும் சின்ன அணிலின் முதுகில் உள்ளது போன்ற மூன்று கோடுகள் இல்லாத வெற்று முதுகு; அளவில் அதை விடப் பல மடங்கு பெரியது—இதுவே **Giant Grizzled Squirrel.** இதன் வாழ்க்கை முறையைப் பற்றிய ஆய்வினை டேராடூனில் உள்ள வனவிலங்கு ஆய்வுக் கழகம் மேற்கொண்டுள்ளது.

ராஜபாளையத்தில் இருக்கும் மாவட்ட வனவிலங்குப் பாதுகாப்புச் சங்கமும் அருகி வரும் அணிலைப் பாதுகாக்க இயன்ற அளவுக்கு முயன்று வருகிறது. எனினும், சமீப காலமாகச் சகட்டு மேனிக்கு மரங்கள் வெட்டப்பட்டுக் காடுகள் அழிந்து வருவதாலும், சரணாலயமாக அறிவிக்கப்பட்ட வனங்களில் கூட விலங்கினங்கள் வேட்டையாடப் படுவதாலும் காமராஜர் மாவட்ட வன விலங்குகள் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளன. புள்ளி மான்கள் தவிர சாம்பார் (**Sambar**) என்றொரு மான் வகையும், நீலகிரி டார் என்ற ஒரு வகைக் காட்டு ஆடும் அதிகமாக அழிக்கப்பட்டு வருகின்றன. போதாக் குறைக்கு அவ்வப்போது பருவ மழை பொய்ப்பதால் காடுகளுக்கும் விலங்குகளுக்கும் நேரும் பாதிப்புகள் வேறு!

இதற்கிடையில், மேற்குத் தொடர்ச்சி மலை அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் ராஜபாளையத்தையும் கொச்சினையும் இணைக்க மேற்குத் தொடர்ச்சி மலைக்குக் குறுக்கே ஒரு புதிய சாலை அமைக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இதனால் வனப்பகுதிகள் அழிவதோடு மனித நடமாட்டமும் வாகனப் போக்குவரத்தும் பெருகி நிலைமை இன்னும் மோசமடையும் என்பதில் சந்தேகமில்லை.

'மேகமலை சரணாலயம்' என்று காமராஜர் மாவட்டத்தில் ஒரு வனவிலங்குச் சரணாலயம் அமைக்க வெகு காலத்துக்கு முன் ஒரு திட்டம் தீட்டப்பட்டது. அத்திட்டம் இன்றளவும் எழுத்தளவில்தான் இருக்கிறது. ராஜபாளையம் வனவிலங்குப் பாதுகாப்புச் சங்கம் பல முறை எடுத்துச் சொல்லியும் சிவப்பு நாடாச் சிக்கல்களிலிருந்து விடுபட்டு அத்திட்டம் செயல்படுத்தப்படவில்லை.

நமது தேசியப் பறவையான மயில் உள்பட பலவித பறவையினங்களும் விலங்கினங்களும் காமராஜர் மாவட்டத்தில் உள்ளன. இந்த இயற்கைச் செல்வங்களைப் பாதுகாத்து அடுத்த தலைமுறையினரும் கண்டு களிக்கச் செய்வது நமது கடமை. இதற்கு முதல் முயற்சியாகத் தமிழகமெங்கும் உள்ள பள்ளி கல்லூரிகளில் வனவிலங்கு அன்பர்களின் கழகங்களும் சங்கங்களும் நிறுவி மாணவர்களிடையே நமது இயற்கை வளத்தின் பெருமையை விளக்கி, அவற்றின் முக்கியத்துவத்தை உணர்த்தி, விழிப்புணர்ச்சி ஏற்படுத்த வேண்டும்.

— **கே. ராமச்சந்திரன்**

(அணில் புகைப்படம்: கட்டுரை ஆசிரியர் எடுத்தது.)

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு கோடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




**23**

**மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்**

| | |
|---|---|
| புரதம் | சிங்க் |
| கொழுப்பு | மாங்கனீஸ் |
| கார்போ | [illegible] |
| ஹைட்ரேட் | [illegible] |
| கால்ஷியம் | மக்னீஷியம் |
| பாஸ்பரஸ் | பேன்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | ரைபோஃப்ளேவின் (பி2) |
| (வி வடிவில்) | வைட்டமின் (பி12) |
| பொட்டாஷியம் | ஃபோலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் ஸி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

# செய்தி வாசிப்பவரின் கண் இமைகள் துல்லியமாக தெரிந்தால்



# அது சாலிடெராகத்தான் இருக்க வேண்டும்

ஒரு டிவி-யின் படத்தெளிவு, செய்தி ஒளிபரப்பாகும் போது நன்றாக மதிப்பிடப்படுகின்றது. ஏனெனில், அது நேரடி அஞ்சல், தவிர, செய்தி வாசிப்பவர், சரியான விளக்கொளியில், ஒரே இடத்தில் நிலையாக உள்ள டிவி காமிராவின்முன் வாசிக்கிறார். ஆகையால், போகஸ் தவறாக இருப்பதற்கே வாய்ப்பில்லை.

இப்போது இதே காட்சியை பல்வேறு டிவிக்களிலும் பாருங்கள். பின்னர் அதை சாலிடெரில் உள்ள படத் தெளிவுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். சாலிடேர் டிவி-யில் செய்தி வாசிப்பவரின் கண்ணிமைகள் போன்ற நுணுக்கமான ஒவ்வொரு விவரமும் தெள்ளத் தெளிவாகத் தெரியும்.

சாலிடெரில் கிடைக்கும் இத்தகைய படத்தெளிவு, கூர்மை, மற்றும் கூடுதலான புலப்பாட்டுக்குக் காரணம், 'வீடியோ இன்டர்மீடியேட் ப்ரீக்வென்ஸியில் (VIF) செய்யப்பட்டுள்ள மாபெரும் சாதனை.

ஆனால் அது மட்டுமே சாலிடெரின் தொழில்நுட்ப சிறப்புக்குக் காரணமல்ல. படம் உருளாமலிருக்க இதிலுள்ள ஆட்டோமாடிக் நாய்ஸ் கான்ஸலேஷன் சர்க்கியூட் உதவுகிறது. ஒவ்வொரு சாலிடேர் டிவியும் வெப்பமண்டல நிலைக்கேற்ப தயாரிக்கப்பட்டிருப்பதால், மழைக்காலத்தில் பாதுகாப்பு பெறுகின்றது. இவை தவிர, சாலிடேர், மற்ற விவரங்களையும், அதாவது ஆடியோ அவுட்புட், VCR கனெக்ஷன், டேப்-இன் அண்ட் அவுட் கனெக்ஷன்கள் ஆகியவற்றையும் கூர்ந்து கவனிப்பதால், உங்கள் டிவியில் அதிகபட்ச சாதகங்களைப் பெறுகிறீர்கள்.

எல்லாவற்றுக்கும் மேலாக, சாலிடெரின் விற்பனைக்குப் பிந்திய இணையற்ற சேவை: உங்களுக்கு எங்கு, எப்போது தேவைப்பட்டாலும் உடனடியாக செய்யப்படும் உன்னத சேவை.




PET 14

Portable with Electronic Tuner

மாடல் அன்பாதரவு:
கீதாஞ்சலி அய்யர், டெல்லி தூர்தர்ஷன்,
செய்தி வாசிப்பவர்.

# சாலிடேர்

-தொல்லையில்லாத் தொலைக்காட்சி



# சுற்றுலாவா — வெற்றுலாவா?

விருதுநகரில் இருந்து வத்திராயிருப்பு போய் (ச்சே, சாலையா அது?) அங்கிருந்து பிரிந்து கிழவன் கோவிலுக்குப் போய் (ஒரு கிராமத்தின் பெயர்!) அங்கிருந்து பிளவக்கல்!

காமராஜர் மாவட்டத்திலேயே, பசுமையாக, செழிப்பாக, தண்ணீர்த் திவலைகளுடன் பயிர்கள் காற்றில் சிலிர்த்து நின்றன என்றால், அது இந்த பிளவக்கல்லுக்குப் போகிற வழியில்தான்!

"இயற்கை எழில் கொஞ்சும் மேற்குத் தொடர்ச்சி மலையின் மடியில் அமைக்கப்பட்டுள்ள பிளவக்கல் அணை சுற்றுலா பயணிகள் காண வேண்டிய ஒன்றாகும். சுற்றுலாப் பயணிகளைக் கவரும் வகையில் இவ்வணையில் அழகிய நீர்த் தேக்கத்தில் படகுச் சவாரி, நீரூற்றுடன் கூடிய வண்ணப் பூங்கா, மீன் காட்சியகம், ஓய்வு விடுதி, நீச்சல் குளம், வனவிலங்கு சரணாலயம் போன்றவை அமைக்கப்பட்டுள்ளன." என்றெல்லாம் நாங்கள் சொல்லவில்லை. காமராஜர் மாவட்டச் செய்தி — மக்கள் தொடர்பு அலுவலர் வெளியிட்டுள்ள 'வளர்ச்சிப் பாதையில் காமராஜர் மாவட்டம்' என்னும் கையேட்டில் காணக் கிடைக்கும் தகவல்கள்.

'இயற்கை எழில் கொஞ்சும் மேற்குத் தொடர்ச்சி மலை' என்ற வரி மிக உண்மை. அந்த மலையில் மழை பெய்தால் புரண்டு வரும் நீரைத் தேக்க அணை கட்டப்பட்டிருக்கிறது என்பதும் நிஜம். இரண்டு வருடங்களாக மழை சரியாக இல்லாததால் தண்ணீர் இல்லை.

மற்றபடி... படகுச் சவாரியா? அந்தப் பக்கம் போய் யாரிடமாவது சொல்லிப் பாருங்கள். சிரிப்பார்கள். நீரூற்றுடன் கூடிய வண்ணப்பூங்கா? நீரூற்று எதுவும் செயல்பட முடியாததால் வண்ணமற்ற பூங்கா, வாடிய பூங்காவாய் இருக்கிறது. அந்தப் பூங்காவில் ஒரு மண் பாதை. பாதையின் இரு ஓரங்களிலும் நடப்பட்ட மூங்கில்கள். அவை வளர்ந்து, தழைந்து சாலையையே மூடியிருக்கும் விதம்... ஏமாந்து போய் சுற்றுலா கிளம்பி வருகிறவர்களை ஏளனம் செய்வது போலிருக்கிறது.

மீன் காட்சியகம் இல்லை. ஆனால் மீன் வளர்ப்புத் தொழில் நடைபெறுகிறது. நீச்சல் குளமும் இல்லை. இரவு நேரங்களில் எப்போதாவது காட்டெருமைகள், யானைகள் வந்து எட்டிப் பார்ப்பது உண்டு என்கிறார்கள், உள்ளூர் மக்கள். அதைத்தான் சரணாலயம் என்று குறிப்பிட்டு விட்டார்கள் போலும்!

பிளவக்கல் அணைக்கட்டைச் சுற்றிப் பார்க்க ஒரு குடும்பம் தப்பித் தவறி காரில் வந்துவிட்டால், (பஸ்ஸாவது கிஸ்ஸாவது — அது என்னவோ காலையில் ஒருவேளையும் மாலையில் ஒருவேளையும் வருகிறாற்போல் உள்ளது) சாப்பிட ஹோட்டல் இல்லை. தங்கிட அரசு ஓய்வு விடுதி தவிர வேறு லாட்ஜ் இல்லை. ஒன்றுமில்லை. சுற்றுலாவைப் பொறுத்தமட்டில் காமராஜர் மாவட்டம், பெரிய வட்டம்தான்.

குளிக்கப் படும் பாடு!



சிவகாசியில் பெரும்பாலான ஆண்கள், வீடுகளில் குளிப்பதில்லை. ஒரு சைக்கிளைப் போட்டுக் கொண்டு பம்ப்செட்டுடன் கூடிய கிணற்றடிக்கு வந்துவிடுகிறார்கள். படத்தில் நீங்கள் பார்ப்பது ஒரு தனியாருக்குச் சொந்தமான பம்ப் செட். குளிக்க, துணி துவைக்க 'காசுவாசாக'. காசை உண்டியில் போட வேண்டுமாம். "எங்க ஊருக்கு லெட்ரீன் வசதி கிடையாதுங்க. வயக்காட்ல ஒதுங்க வேண்டியதுதான். குளிக்கறதுக்கு இந்த மாதிரி பம்ப் செட் எங்கே எங்கேன்னு தேடி அலைய வேண்டியதுதான். காலையில ஆஃபீஸ் போறதுக்கு முன்னால இதுக்கே நேரம் சரியாயிருக்கும். பொம்பளைங்க குளிக்கறதேயில்ல. தண்ணியால தடவிக்கிறாக. இருபத்தஞ்சி வருஷமா இந்தக் கஷ்டம். உங்களோட பேசிட்டிருந்தா நான் குளிக்கறது டவுட்தான்" என்று ஒரு குளியா

மகன் சொல்லிக் கொண்டே விரைந்தார்.






காமராஜர் மாவட்டத்தில் நிறைய சினிமா தியேட்டர்கள். மக்களுக்கு இருக்கும் ஒரே பொழுது போக்கு அம்சம். ஆனால் பெரும்பாலான தியேட்டர்களில் என்ன நடக்கிறது என்றால் —

- குறைந்த வகுப்புக்குண்டான டிக்கெட்டுகள் கொடுக்கப்படுவதேயில்லை.
- புதிய படங்களுக்கு முதல் வகுப்பு டிக்கெட் காசுக்கு மேல் அரை ரூபாய் அல்லது ஒரு ரூபாய் கொடுத்துதான் கவுண்டரிலேயே டிக்கெட் வாங்க வேண்டும்.
- மக்கள் தியேட்டருக்குள் முண்டியடித்து ஓடி எங்கே வேண்டுமானாலும் அமரலாம். முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு பாகுபாடுகள் எல்லாம் இந்த சோஷலிச தியேட்டர் முதலாளிகளுக்குக் கிடையாது. 200 பேர் அமர வேண்டிய தியேட்டரில் 250 — 300 பேர்களுக்குக் கூட அனுமதி உண்டு.
- சில சமயங்களில் டிக்கெட்டுகளுக்குப் பதில் இரு விரற்கிடை அகலமுள்ள துண்டுக் காகிதங்கள் கொடுப்பதும் உண்டு.
- சில தியேட்டர்களில் ஐந்து காட்சிகள் நடைபெறுகின்றன.
- இரவு 8.30 காட்சிதான் விசேஷமான காட்சி. அந்தக் காட்சியில் பெரும்பாலும் மலையாளம் அல்லது ஆங்கிலப் படம்தான் திரையிடப்படுகிறது. அந்தக் காட்சியில் நான் தவறாமல் மகோன்னதமான 'பிட்' காட்டப்படும். 'பிட்' என்றால் பச்சையான நீலப்படம்! பாவம் காமராஜர் மாவட்ட மக்கள்!

## "அப்பா!" "மகனே?"

"அப்பா!"

"என்ன மகனே?"

"இவர் என்ன செய்கிறார்?"

"நின்று கொண்டே சிறுநீர் கழிக்கிறார்!"

"எங்கே?"

"விருதுநகர் பஸ் நிலையத்தில்."

"இந்த பஸ் நிலையத்திற்கு போர்டு கூட இல்லையே?"

"சிறுநீர் கழிக்குமிடம் என்று போர்டா எழுதியிருக்கிறது? அவர் சிறுநீர் கழிக்கவில்லை?"

"இவ்வளவு சின்ன இடத்தில் எப்படி இவ்வளவு பஸ்களை நுழைத்து நிறுத்துகிறார்கள்?"

"டிரைவர்கள் முன்பு சர்க்கஸ் கம்பெனிகளில் வேலை செய்தவர்களாக இருப்பார்கள்."

"சிறுநீர் கழிக்க ஒரு சரியான இடம் கட்டக் கூடாது?"

"வாடா பேசாமல். ஊர் நியாயம் பேச வந்து விட்டான். எம். ஜி. ஆர். படம் பார்க்க நேரம் ஆகவில்லை?"

## இது 'அந்த' மாதிரிப் பள்ளி அல்ல ஒரு முன் மாதிரிப் பள்ளி!



விருதுநகரிலிருந்து அருப்புக்கோட்டை செல்லும் ஒரு சுற்றுவழிப் பாதையில் குல்லூர்ச் சந்தை என்னும் கிராமம் இருக்கிறது. இந்தக் கிராமத்தில் ஸ்ரீ வீரப்பா வித்யாலய உயர்நிலைப் பள்ளி என்னும் ஒரு தனியார் பள்ளி இருக்கிறது. இதன் தலைமை ஆசிரியர் ப. ராமச்சந்திரன் பள்ளி நேரம் முடிந்ததும், பெரிய வகுப்பு மாணவர்களை மறுபடியும் வரச் சொல்லி மாலை 6 மணி முதல் 9 மணி வரை பள்ளி வராந்தாவில் பாடம் போதிக்கிறார். மாணவர்களும் தங்கள் சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்கின்றனர். இந்த உழைப்பின் பலன்தான் சென்ற ஆண்டில் இந்தப் பள்ளியில் படித்துத் தேர்ச்சி பெற்ற ஜே. பாலசுப்பிரமணியன். இந்த மாணவர் சென்ற வருட S.S.L.C. பொதுத் தேர்வில் 474 மதிப்பெண்கள் பெற்று காமராஜர் மாவட்டத்திலேயே முதல் மாணவனாகவும், மாநில அளவில் ஆறாவது மாணவனாகவும் திகழ்கிறான்.

# கல்கி

## தீபாவளி மலர் 1986

**தெய்வ மணம்:**

காஞ்சி முனிவரின் வண்ணப்படம், கட்டுரை; திருமுருக கிருபானந்த வாரியாரின் வண்ணப்படம், கட்டுரை; திருவேற்காடு தேவி கருமாரியம்மன் வண்ணப்படம், கட்டுரை... மேலும் பலப் பல...

**கலைமணம்:**

'மோகம் என்பது இதுதானோ?'; 'சிம்மங்களின் சந்திப்பு'; 'மகத்தான மனமாற்றங்கள்' என்பன போன்ற பல தலைப்புக்களில் வண்ண ஓவிய மடல்கள்.

**சமுதாயப் பார்வை:**

மீனவரின் ஒரு நாள் வாழ்க்கை; கிராமங்களில் இந்தியாவின் ஆன்மா என்பது போன்ற பலதரப்பட்ட தலைப்புக்களில் வண்ணப் புகைப்படக் கோவை.

**கற்பனைச் சிறகுகள்:**

அமரர் கல்கியின் குறுநாவல் தொடங்கி தமிழகத்தின் முதல் தர எழுத்தாளர்களின் சிறுகதைகள்.

**மலருக்குள் மலர்கள்**

மங்கையர் மலர், கவிமலர், கோகுலம் பக்கங்கள்; மற்றும் பக்கத்துக்குப் பக்கம் நகைச்சுவை!

**எதைக் கூற? எதை விட?**

இன்னும் எத்தனை எத்தனையோ! பார்த்தும் படித்தும் பரவசமடையுங்கள்!

**விலை ரூ. 25**

உள்ளூர் ஏஜெண்டிடம் உடனே பதிவு செய்து கொள்ளுங்கள். தபாலில் பெற விரும்புவோர் ரிஜிஸ்தர் செலவு உள்பட ரூ. 30 அனுப்புதல் வேண்டும்.

அயல் நாடு (கடல் மார்க்கம்) ரூ. 60
(விமான மார்க்கம்) ரூ. 165

மானேஜர், கல்கி,
சென்னை — 600 032.




இப்படி ஊதாரித்தனமா செலவு பண்றியே?..
ஐயையோ! நான் வரியிலே சம்பாதிச்சு வாரிக் கொட்டறதை எல்லாம்...!
வி.பி.சிங்
நிர்வாகம்


பொதுச்செயலாளர் திண்டும் இருக்கட்டுமே!..சுறுசுறுப்பா வேலை செய்யலாம்!
ராகவானந்தம்
முதல்வர்
போலீஸ்
ஊழல் ஒழிப்பு
திட்டம்
மது விலக்கு
வரி இனங்கள்
பொது நிர்வாகம்
பொதுச் செயலாளர் பதவி


ஒரு பூட்டு தொறந்தாச்சு! இன்னொரு பூட்டுக்கும் சாவி இதோ!.
இல்லேன்னு டெல்லி சாவி!.. அதுவும் இல்லேன்னு வேற சாவி!.
அது சரியில்லேன்னு இன்னொண்ணு!..அதுக்கும் மசியல்லேன்னு
எத்தனையோ சாவி!..
ஸ்ட்ரைக் வாபஸ்
நூற்பு-நெசவாலைத் தொழிலாளர் பிரச்னை
சாமநாதன்



# கல்கி

1986 அக்டோபர் 19
மலர் 45 இதழ் 12
அக்ஷய ஐப்பசி 2



## ராஜதந்திரி ராஜீவ் அரசியல்வாதி நிலைக்குத் தாழ்வதா?

கல்கத்தா சென்ற பிரதமர், மேற்கு வங்கத்துக்கான 684 கோடி ரூபாய் அபிவிருத்தித் திட்டங்களை அங்கீகரித்துப் பணம் ஒதுக்கினார். கால தாமதங்களைத் தவிர்க்க இப்படி மாநில அரசுடன் நேரில் பேசி உடனுக்குடன் முடிவெடுக்கிற முறை வரவேற்கத் தக்கதுதான்.

ஆனால் இதே மூச்சில் பிரதமர், மேற்கு வங்க மாநில அரசு சரியாகச் செயல்படவில்லையென்றும் விளம்பரத்துக்கும் பிரசாரத்துக்குமே அதிகப் பணம் செலவிடப்படுகிறது என்றும் அபிவிருத்தித் திட்டங்கள் சரிவர அமல்படுத்தப்படவில்லை என்றும் மின் உற்பத்திக்காக ஆறாவது திட்டத்தில் ஒதுக்கப்பட்ட பணத்தில் முப்பது சதம் செலவாகவே இல்லை என்றும் இன்னும் பலவித குற்றச்சாட்டுக்களையும் அடுக்கியிருக்கிறார்.

இவ்வாறு அவர் கூறிக் கொண்டே போன குற்றச்சாட்டுக்களில் உண்மை இருக்கலாம். ஆனால் அவற்றை இந்தச் சமயத்தில் வெளிச்சம் போட்டுக் காட்ட முயன்றிருக்க வேண்டுமா? மாநில முதல்வரோடு மனம் விட்டுப் பேச்சு வார்த்தை நடத்தி 684 கோடி ஒதுக்கிய பின்னர் கூடவே மாநில அரசை இழிவாகவும் பேசுவதென்பது தவறோ குற்றமோ இல்லையென்றாலும் இங்கிதக் குறைவுதான், சந்தேகமில்லை. இரண்டையும் வேறு வேறு சந்தர்ப்பங்களில் பிரதமர் இடைவெளி விட்டுப் பேசியிருந்தால், 'பிரதமர் ராஜதந்திரி என்ற உயர்நிலையிலிருந்து அரசியல்வாதி என்ற சாதாரண நிலைக்குத் தாழ்ந்து விட்டார்' என்று குற்றம் சாட்ட இடமில்லாது போயிருக்கும். ஆனால் இப்போதோ? 'பாருங்கள்! நான் மாநில அரசுக்கு எத்தனை கோடி ஒதுக்குகிறேன்; ஆனால் ஜோதிபாசு அரசு அதை விரயம் செய்கிறது, செயல் திறனின்றி நடந்து கொள்கிறது' என்று மக்களிடம் பிரசாரம் செய்யவே பிரதமர் பேசியது போல் தொனிக்கிறது. இதே பாணியில் பிரதமர் அடுத்து காங்கிரஸ் ஆளும் ஒரு மாநிலத்தில் பேசுவாரா? அல்லது காங்கிரஸ் ஆளும் மாநிலங்களில் தவறுகள் எதுவுமே நடப்பதில்லை என்று நாம் நம்ப வேண்டும் என எதிர்பார்க்கிறாரா?

கூர்க்காலாந்து கோரிக்கை பற்றிப் பேசிய முறையிலும் சாதாரண அரசியல்வாதி நிலைக்கு இறங்கிவிட்டார் பிரதமர். மேற்கு வங்கத்தில் அவருடைய காங்கிரஸ் கட்சியே, 'கூர்க்காலாந்து இயக்கம் தேச விரோதமானது' என்று ஆளும் கட்சியையும் முந்திக் கொண்டு சட்டசபையில் தீர்மானம் நிறைவேற்றச் சபாநாயகரை அனுமதி கோரியிருந்தது. இது தெரியாமல் ராஜீவ் மேற்கு வங்க அரசை மட்டம் தட்டுவதாக எண்ணிக் கொண்டு 'கூர்க்காக்களின் இயக்கம் தேச விரோதமானது அல்ல; அவர்களை மேற்கு வங்க அரசு சரியாகக் கவனிக்காததுதான் கிளர்ச்சிக்குக் காரணம்' என்று கூறி வைத்தார். விளைவு, மேற்கு வங்கத்தின் அவரது கட்சிக்காரர்களே ஒரு தர்மசங்கட நிலையில் சிக்கித் தவித்துப் போனார்கள்!

நமது பிரதமர் உண்மையிலேயே கூர்க்காலாந்து இயக்கம் குறித்து ஜோதிபாசு அரசுடன் மாறுபட்ட கருத்துக் கொண்டிருந்தாலும் அதைத் தனிமையில் முதல்வருடன் விவாதித்து இருவரும் ஒரு நல்ல முடிவுக்கு வந்திருக்க வேண்டும். இவ்விஷயத்தில் மத்திய — மாநில அரசுகள் ஒரு குரலாகப் பேசியிருக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் அரசியல் நோக்கில் தங்களுக்கிடையில் கருத்து மாறுபாடு இருப்பதாகக் காட்டிக் கொண்டதில் ஆதாயம் கூர்க்காலாந்து கிளர்ச்சியாளருக்கே.

ஒருவரை ஒடுக்க இன்னொருவரைத் தூண்டி விடுவது என்ற மட்டரகமான அரசியலைக் கையாண்டுதான் இந்திரா காந்தி நாட்டில் இன்றைக்கும் தலைவலியாக விளங்கும் பல பிரச்னைகளைத் தோற்றுவித்தார். அதே தவறை ராஜீவும் செய்வதா?

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# எம்.ஜி.ஆரின் அடுத்த திட்டம் என்ன?

*** ஆர். அப்துல் சலாம், திருச்சி. ***

**? சியோல் — ஏசியாட் போட்டிகளில் கலந்து கொள்ள நானூறு விளையாட்டு வீரர்கள் சென்றும் கூட, பதக்கப் பட்டியலில் இந்தியா பின்தங்கிப் போய்விட்டதே?**

! சென்ற நானூறு பேரில் கால்வாசிப் பேர் விளையாட்டு என்றால் விசை என்ன விலை என்று கேட்கக்கூடியவர்கள் — ஊர் சுற்றிப் பார்க்கப் போன போகஸ் பேர்வழிகள் என்று ஒரு புகார் கிளம்பியுள்ளதைக் கவனிக்கவில்லையா நீங்கள்? கேரள அரசு மாதிரி மற்ற அரசுகளும் நிஜமான விளையாட்டு வீரர்களை ஊக்குவிக்காத வரை நாம் உருப்படப் போவதில்லை.

*** ஸ்ரீ மனோபாரதி, பாண்டிச்சேரி.**

**? இன்றைய திரைப்படங்களால் லாபம் அதிகமா? நஷ்டம் அதிகமா?**

! பெரும்பாலும் சினிமாக்காரர்களுக்குச் சமுதாய அக்கறை என்பது துளியும் இல்லை என்பதால், அவர்கள் தயாரிக்கும் படங்கள் அவர்களுக்கு லாபகரமாகவும், சமுதாயத்திற்கு நஷ்டமாகவும்தான் இருக்கின்றன.

*** ஆர். சே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.**

**? பெருச்சாளிகளைப் பார்த்துப் பயந்ததுண்டா?**

! நாம் எதற்குப் பயப்பட வேண்டும்? ஊழல் பெருச்சாளிகளல்லவா நம்மைக் கண்டு பயப்பட வேண்டும்!

*** பி. இராமகிருஷ்ணன், மேலகிருஷ்ணன் புதூர்.**

**? 21 ஆம் நூற்றாண்டில் இந்தியா எவ்வளவு தூரம் முன்னேறும் என்று நினைக்கிறீர்கள்?**

! இப்போது நம்மிடையே நிலவி வரும் உட்பூசல்களையும், மொழிப் பூசல்களையும் பார்க்கும் போது கூப்பிடு தூரமாவது போவோமா என்பது கூடச் சந்தேகம்தான்!

*** ப. இ. இக்பால், சென்னை.**

**? ஆசிய விளையாட்டுப் போட்டியில் கிரிக்கெட்டைச் சேர்க்காதது ஏன்?**

! கிரிக்கெட் என்பது உலகளாவிய விளையாட்டே அல்ல. அதனால்தான் ஏசியாட், ஒலிம்பிக்ஸ்களில் இடம் பெறவில்லை. குளிர் தேசத்தில் உள்ளவர்கள், சில நாட்களாவது சூரிய ஒளியில் காய்வது உடம்புக்கு நல்லது என்பதால், இங்கிலாந்துக்காரர்கள் ஐந்து நாள் விளையாட்டான கிரிக்கெட்டைக் கண்டுபிடித்தார்கள். பிறகு அது மெல்ல மெல்ல அதன் காலனி ஆதிக்கத்திலிருந்த இந்தியா போன்ற சில நாடுகளில் மட்டும் பிரபலமாகத் தொடங்கியது.

*** எம். எம். ஷர்புதீன், தோப்புத்துறை.**

**? இளையராஜாவிடம் போய் கைகட்டி, நாள் கணக்கில் காத்திருக்க நான் ஒன்றும் சுயமரியாதையற்றவன் அல்ல என்று பாக்யராஜ் கூறியுள்ளாரே?**

! பரமசிவன் கழுத்துப் பாம்பாயிற்றே; அதனால்தான்!

*** முத்து செந்தில்வாசன், திருமருகல்.**

**? எம். ஜி. ஆரின் அடுத்த திட்டம் என்ன?**

! 'உங்கள் உடல்நிலை சரியில்லை. பொறுப்புக்களைக் குறைத்துக் கொள்ளுங்கள்!' என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டாராம் ராஜீவ். அதன் எதிரொலிதான் கட்சியின் பொதுச் செயலாளர் பொறுப்பை இப்போது எம். ஜி. ஆரே ஏற்றுக் கொண்டிருப்பது. இனி அடுத்த கட்டமாக அ. தி. மு. க. வில் இருக்கும் இ. காங்கிரஸ் ஆதரவாளர்களுக்கு அரசுப் பதவிகள் தரப்படும். ஆக, மெல்ல மெல்ல அ. இ. அ. தி. மு. க.வே இ. காங்கிரஸில் இரண்டறக் கலந்துவிடும் என்பது சில அரசியல் நோக்குநர்களின் கணிப்பு.

*** த. சத்தியநாராயணன், அயன்புரம்.**

**? கள்ளம் — கபடம் இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?**

! கள்ளம் என்றால் 'வஞ்சனை,' 'களவு, பாதகம்' என்றும் கபடம் என்றால் 'வஞ்சகம்' என்றும் சொல்லுகிறது அகராதி. இதிலென்ன பெரிய வித்தியாசம்? லஞ்சமும் ஊழலும் மாதிரி இரண்டும் ஒன்றோடொன்று



* கிறுகிறு அறிக்கை!

நீங்கள் கேட்டவை — தராசு

! ஆமாம், நிறவெறி கொண்ட தென்னுப்பிரிக்காவுக்கு எதிராகப் பொருளாதாரப் புறக்கணிப்பு நடத்த வேண்டும் என்று தீர்மானித்தது அமெரிக்க காங்கிரஸ் (நாடாளுமன்றம்). அதைத் தமது வீட்டோ அதிகாரம் கொண்டு நிராகரித்தார் ரேகன். ஆனல் வீட்டோவைக் குறிப்பிட்ட சதவித வோட்டுக்கள் அளித்துக் காங்கிரஸ் அங்கீகரிக்க வேண்டும். இந்த அங்கீகாரத்தை அமெரிக்க காங்கிரஸ் அளிக்கவில்லை. இதிலிருந்து என்ன தெரிகிறது? எவ்வளவோ வற்புறுத்தலுக்கும் கட்சிக் கொறடா நிர்ப்பந்தத்திற்கும்



* கப்ஸிஞர்!



* பரமசிவனின் பாம்பு!



* மூக்குடைப்பு!

இணைந்தவைதான்!

*** ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.**

**? சமீபத்தில் தலைசுற்ற வைத்த விஷயம் எது?**

! சாராயக் கடைகளைத் திறந்து வைத்ததோடு, கையில் கத்தி வைத்துக் கொள்ள வேண்டும் என்று 'அறிவுரை' வழங்கிய எம். ஜி. ஆர்., ராஜீவைக் கொலை செய்ய நடந்த முயற்சி பற்றிக் குறிப்பிடும் போது, காந்தி பிறந்து அகிம்சை போதித்த நாட்டில் மக்கள் வன்முறையைக் கையாள்வது வருந்தத்தக்கது என்று அறிக்கை விட்ட விஷயம்தான் என்னைக் கிறுகிறுக்க வைத்து விட்டது!

*** க. இளங்கோ, காரைக்கால்.**

**? எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சை நம்பலாமா?**

! எதற்கு? வேலை வாங்கித் தரும் என்றா? ஸாரி!

*** லக்ஷ்மி, விருதுநகர்.**

**? ரேகனுக்கு மூக்குடைப்பாமே?**

ஆளான போதிலும் ரேகனுடைய கட்சியைச் சேர்ந்த பலரே அவருக்கு எதிராகவும் தங்கள் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமலும் வோட்டளித்திருக்கிறார்கள் என்பதுதான். இது நமது நாடாளுமன்ற, சட்டமன்றத் தலையாட்டி பொம்மைகளுக்கு ஒரு பாடம். ஆனல் அவர்கள் கற்றுக் கொள்ளவா போகிறார்கள்!

*** ரவிச்சந்தர், சென்னை.**

**? நல்லவேளை ரொபைரோ தப்பிவிட்டார் இல்லையா?**

! ஆண்டவனுக்கு நன்றி கூறும் நேரத்திலேயே — கலங்காத அவர் உள்ளத்தையும் வீரமான அறிக்கையையும் பார்த்து வியக்கின்ற வேளையிலேயே — கோட்டை போன்ற அமைப்பில் ஓட்டை உண்டாக்கிக் கொண்டு பயங்கரவாதிகள் நுழைவது சாத்தியமாகிறது என்றால், அந்தப் போலீஸ் தலைவரின் ஆற்றலில் நாம் வைத்திருந்த நம்பிக்கை சற்று ஆட்டம் காணத்தான் செய்கிறது.

*** ரூ. 10 பரிசு பெறுபவர்:**
**ஆர். அப்துல் சலாம்,**
**12, தெற்கு 2 வது தெரு,**
**மன்னார்புரம், திருச்சி — 620 020.**



# பாலனின் பிரார்த்தனை!

**பா**ம்பை மிதித்தவன் போல் பதறினேன், நான்.

காரணம் —

பாலனின் புத்தக அலமாரியில் இருந்த அந்த சிகரெட்.

இரண்டு தினங்களுக்கு முன்பு.

''அப்பா... நைட் முழிச்சு படிக்கிறதுக்காக என் கிளாஸ் மேட்ஸ் சிலர் சிகரெட் பிடிக்கிறானுங்க, அப்பா...''

அப்போதே குண்டூசி ஒன்று குரல் வளையில் சிக்கியது போல் ஓர் உறுத்தல்.

ஆயினும், காட்டிக் கொள்ளவில்லை.

''ரோஸ் மாதிரி அழகாய் இருக்கும் நுரையீரலை அது 'ரோஸ்ட்' பண்ணிவிடும். பாவம்... உன் கிளாஸ்மேட்ஸ்...'' என்று, பெற்ற பிள்ளையை எச்சரிக்கை செய்தேன்.

அந்தனைக்குப் பிறகும் — இன்று — இப்போது — பாலனின் அலமாரியில் இந்த நச்சுக் குழாய்-இருக்கிறதென்றால்...

மனம் நடுங்கியது.

உடனே, அதை எடுத்து ஒளித்து வைத்துவிட்டு, 'பாத்ரூம்' போனேன்.

பத்து நிமிடம் என்னவோ ஆகி இருக்கும்.

வெளியே வந்தபோது —

பள்ளி விட்டு வந்த சின்னப் பெண்கள் இருவரும் ''அப்பா...'' என்று துள்ளி வந்தனர்.

கண்கள், பாலனைத் தேடின.

''பாலன் இன்னும் வரல்லையா...''

''வந்துட்டானே... வந்தவன் என்னவோ அவசரமாய் வெளியில் போனான்'' என்றாள், ஜானகி — சமையலில் இருந்தவாறு.

எங்கே போய் இருப்பான்?

அவசரமாய் வெளியேறினேன்.

வழியில் வந்த பாலனின் வகுப்புத் தோழனைக் கேட்டேன்.

''கொஞ்சம் முன்னாடி பிள்ளையார் கோயில் பக்கம் போனான், அங்கிள்.''

கோயில்.

கண் மூடி, கையேந்தி ஆழ்ந்த பக்தியுடன் நின்று கொண்டிருந்தான், பாலன்.

'சாமியிடம் என்ன வேண்டுகிறான்?' அகலத் தூணுக்குப் பின்னால் ஒளிந்து நின்று கேட்டேன்.

''பிள்ளையாரப்பா... என் தங்கை கவிதாவுக்கு நேற்று ஸ்கூலிலே கைவேலைப் போட்டி. காலி சிகரெட் டப்பாவில் ஆமை செய்யச் சொன்னார்களாம். பெட்டிக் கடை பெரியசாமிதான், அப்பாவுக்குத் தெரிஞ்சவர். நேற்றிரவு அவரிடம் போய் காலி டப்பாக்கள் கேட்டேன். எனக்கு முந்தி வேறு யாரோ வாங்கிப் போய்விட்டார்களாம். அடுத்த தெருவுக்கு ஓடினேன்.

''அந்தக் கடைக்காரர் பரிச்சயம் இல்லாவிட்டாலும் நல்ல மனிதர். ஏராளமான காலி டப்பாக்களை அள்ளிக் கொடுத்தார். வீட்டிலே வந்து பார்த்தால் ஒரு காலி பாக்கெட்டில் முழுசாய் ஒரு சிகரெட் இருந்தது. நாற்பது காசாம் அந்த சிகரெட். பாவம், உதவி பண்ணியவருக்கு நஷ்டம் ஏற்படுத்தலாமா? காலையில் கொண்டு போய்க் கொடுத்திடலாம் என்று புத்தக அலமாரியில் பத்திரமாய் எடுத்து வைத்தேன்..

''ஆனால், இன்று காலையில் பள்ளிக்கூடம் போகும் போது சிகரெட்டை எடுத்துப் போக மறந்துவிட்டேன். இருந்தாலும் கடைக்காரரிடம் உண்மையைச் சொல்லி, ஈவினிங் கொண்டு வந்து கொடுப்பதாகச் சொல்லிவிட்டுப் போனேன். ஆனால், பள்ளி விட்டு வந்து பார்த்தால் சிகரெட்டைக் காணோம். உடனே, வேறொரு சிகரெட் வாங்கி அந்தக் கடைக்காரரிடம் கொடுத்து விட்டேன்.

''ஆனால் புத்தக அலமாரியில் வைத்த சிகரெட் எப்படி காணாமல் போகும்! எங்கள் வீட்டில் நானும், அப்பாவும்தான் ஆண்கள். ஒருவேளை, அப்பா அதை எடுத்து உபயோகித்திருப்பாரோ... எங்களுக்குத் தெரியாமல் அப்படி ஒரு தீய பழக்கம் அவருக்கு இருக்குமோ! பிள்ளையாரப்பா, உன்னிடம் நான் வேண்டிக் கொள்வதெல்லாம் இதுதான். என் சந்தேகம்,வெறும்சந்தேகமாகவேபோயிடணும். கடைசி வரை என் அப்பாவுக்கு புகைப் பழக்கம் வரவே கூடாது. ரோஸ் மாதிரி இருக்கும் அப்பாவின் நுரையீரல் ரோஸ்ட்டாகாமல் இருக்க நீதான் அருள் புரியணும்...''

தாரையாய்க் கண்ணீர் வடித்தான், என் பிள்ளை.

அப்புனித நீரைத் துடைக்க என் கைகள் பரபரத்தன.

— தமிழினியன்

# ஸ்டேன்ஸ்

## ரெட் ரோஸ் டஸ்ட் டீ

**சிகப்பு ரோஜாவின் அழகில் ஆழ்ந்து
மதிமயங்காதவர் உண்டோ...**

## ஸ்டேன்ஸ் ரெட் ரோஸ் டஸ்ட் டீ

**ருசித்து மனம் பறிகொடுக்காதவர் உண்டோ?**

ரோஜாவின் மணத்தை யாரால் மறக்கமுடியும்? ஸ்டேன்ஸ் ரெட் ரோஸ் டஸ்ட் டீயின் நறுமணமும் அதேபோல்தான்—நினைத்தாலே நாவூற வைப்பது.

அதன் சுவையோ, ம்ம்ம்... இயற்கையானது. முழு திருப்தி அளிப்பது. மீண்டும் மீண்டும் பருகத் தூண்டுவது.

இத்தனிச் சுவையையும் நறுமணத்தையும் அதிகமாகப் பெறலாம்—ஸ்டேன்ஸ் ரெட் ரோஸ் டஸ்ட் டீ அளிக்கும் அதிக கோப்பைகளிலிருந்து.

ஸ்டேன்ஸ் கம்பெனியாரின் 80 வருட அனுபவத்தின் விளைவான தரமான தயாரிப்பு...




M86.61 Tm

**ஸ்டேன்ஸ் ரெட் ரோஸ் டஸ்ட் டீ.
இதன் உன்னதச் சுவை, ரோஜா அழகிற்கு இணை**

டீலர்-உரிமைபெற அணுகுங்கள்:
ஸ்டேன்ஸ் டீ & காபி லிமிடெட் த.பெ. எண் 3856 கோயம்புத்தூர்-641 018.

## பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

**12**

தாமஸ் வீசி எறியப் போன சிகரெட் துண்டைத் தடுத்து வாங்கித் தன் சிகரெட்டை உயிர்ப்பித்துக் கொண்டு, ''கொஞ்சம் விளக்கமா சொல்லு தாமஸ். நாம ஏன் பயப்படணும்னு சொல்றே?'' என்றான் சுகுமார்.

தூரத்து ஒலிபெருக்கி திரு. சுப்பிரமணியன் அவர்களை இந்தக் கூட்டத்திற்குத் தலைமைப் பொறுப்பு ஏற்று நடத்திக் கொடுக்குமாறு கேட்டுக் கொண்டிருந்தது. சாரத்தின் மேல் நின்று பானர் எழுதினவன் கீழேயிருந்து எறியப்பட்ட தீப்பெட்டியை அபாயகரமாகத் தாவிப் பிடித்தான்.

தாமஸ் தீக்குச்சியால் காது குடைந்து கொண்டு, ''என்ன புரியலை உனக்கு? நாகராஜன் விஷயத்திலே திட்டம் யார் யார் போட்டோம்?'' என்று கேட்டான்.

''நான், மாயா, நீ.''

''வேற யாரும் உண்டா?''

''சேச்சே. வேறே யாரு?''

''வேறே யார்கிட்டேயாவது பேசினதா நினைவிருக்கா?''

''இதைப் போய்ப் பேசுவாங்களா தாமஸ்?''

''பின்னே எப்படி அந்த நபருக்கு நம்ம திட்டம் தெரிஞ்சது?''

''புரியலையே... நாங்க கார்ல புறப்பட்டுப் போனதுமே நீ உள்ளே நுழைஞ்சிட்டே. இல்லையா?''

''ஆமாம். காம்பௌண்ட் ஏறிக் குதிச்சி, நிதானமா நடந்து... ரூமுக்குள்ளே போனப்போ எப்படியும் பத்து நிமிஷம் ஆகியிருக்கும். நான் பார்த்தப்போ இன்னும் ரத்தம் வந்துக்கிட்டு இருந்திச்சி. நீங்க புறப்பட்டுப் போனதும் — நான் உள்ளே வந்ததும் நடக்கிறதுக்கு நடுவிலே ரொம்ப சாமர்த்தியமா செஞ்சிட்டான் இதை. எப்போ உள்ளே வந்தான்? எப்படி உள்ளே வந்தான்? எப்படி வெளியே போனான்? எதுவுமே புரியலையே...''

''அதானே... மாயாகிட்டே சொன்னா ரொம்ப அதிர்ச்சி அடைஞ்சிடுவா. பங்களாலதான் நம்ம திட்டம் எப்படியோ லீக் ஆகியிருக்கணும்.''

''சுகுமார், நம்ம திட்டத்துக்கு நோக்கம் இருக்கு. பெரிய பலன்களை எதிர்பார்த்து இறங்கினோம்.

அந்த நபரோட நோக்கம்என்ன? அது தெரிஞ்சாகணும். நாம செய்ய நினைச்சதை எவனோ செஞ்சிட்டான். நமக்கு வேலை மிச்சம்னு சந்தோஷப்பட்டுக்கிறது முட்டாள்தனம் சுகுமார்."

"வாஸ்தவம். இப்ப என்ன செய்யலாம்னு நினைக்கிறே?"

"ரெண்டு வகையிலே நாம செயல்படணும் சுகுமார். ஒண்ணு — இந்த அபாயகரமான குற்றவாளியை அடையாளம் கண்டு பிடிக்கிறது."

"எப்படி?"

"எப்படியாவது."

"மற்றது?"

"தலை மறைவாப் போன அந்த அசோக்கைக் கண்டுபிடிச்சாகணும்."

"அதைத்தான் போலீஸ் செஞ்சிக்கிட்டிருக்காங்களே தாமஸ்."

"அந்த முயற்சியிலே நாமும் தனிப்பட்ட முறையிலே ஈடுபடறது நல்லது. ஏன் தெரியுமா? அசோக் இப்போ அடிபட்ட நாகம். நீயும், உன் தங்கையும் சேர்ந்து சதி செஞ்சி கொலையிலே தன்னைச் சிக்க வச்சிட்டதா நம்புற அவனோட ஆத்திரத்துக்கு வடிகால் தேடி... வேறே விதமாச் செயல்பட்டா?"

"வேறே விதமான்னா?"

"என்னப்பா உனக்கு ரொம்ப விரிவா எதையும் சொல்ல வேண்டியிருக்கு. அப்பாவோ புதுப் பொண்டாட்டி பேர்ல சொத்து பூரா எழுதி வச்சிட்டுக் கொலையாகிட்டார். பழியோ தன் மேல் விழுந்துடிச்சி. இப்போ போலீஸ் துரத்துது. மாட்டிக்கிட்டா ஜெயில் நிச்சயம். கொலைக் குற்றம் நிரூபணம் ஆனா மரண தண்டனை கூடக் கிடைக்கலாம். இந்த நிலையிலே தன்னை இந்தக் கதிக்கு ஆளாக்கினவங்களை நிஜமாவே கொன்னுட்டு ஓடிடலாம், இல்லே சரணடைஞ்சுடலாம்னு அவன் மனசு நினைக்கலாம் இல்லையா?"

"என்ன தாமஸ் ரொம்ப பயமுறுத்தறே?"

"நான் நினைக்கிறதைச் சொல்றேன். அசோக் எவ்வளவு சீக்கிரம் போலீஸ் கைல மாட்டுறானோ, அவ்வளவு சீக்கிரம் நமக்கு நிம்மதி. அசோக்கைக் கண்டுபிடிச்சி போலீசுக்குத் தகவல் தந்துடணும். இல்லேன்னா, தீராத பட்சத்திலே அவனை அடையாளம் தெரியாம கொன்னுடணும். அப்பதான் நமக்கு நிரந்தரமாகும் இந்த சந்தோஷம், வசதி எல்லாம்."

சுகுமார் அமைதியாக யோசித்தான்.

"நீ சொல்றது கரெக்ட் தாமஸ். திட்டப்படி எல்லாம் கரெக்டா நடந்துடிச்சின்னு சந்தோஷமா இருந்தேன். நீ சொன்னப்புறம் தான் இவ்வளவு சிக்கலும் புரியுது. நீ வந்தது நல்லதாப் போச்சு. வா, பங்களாவுக்குப் போலாம். மாயாவோட பேசலாம். என்ன விதத்திலே செயல்படலாம்னு யோசிக்கலாம்," என்று எழுந்தான்.

தீக்குச்சியை எறிந்துவிட்டுத் தாமசும் எழுந்தான்.

அவர்கள் படிகளில் இறங்கினார்கள்.

"அசோக் எங்கே இருக்கான்னு நிச்சயமா ரெண்டு பேருக்குத் தெரியும்" என்றான் தாமஸ்.

"யாரு?"

"அவன் ஃபிரண்டு கதிர். அவன் லவ்வரு பிரேமா."

"போலீஸ் அவங்களை விசாரிச்சிடுச்சி தாமஸ்."

"விசாரிச்சா சொல்லிடுவாங்களா?"

"பின்னே?"

"ரெண்டு நாள் டயம் கொடு. நான் சொல்றேன், அசோக் எங்கே இருக்கான்னு."

"கண்டுபிடி. உன்னாலமுடியும். நீ செய்வே. பின்னால உக்காரு" என்றான் சுகுமார், வண்டியை ஸ்டார்ட் செய்து. நேர்மேலே குறை நிலாவும் கூடவே பயணம் செய்தது.

**கோ**டம்பாக்கம் கிரைம்ஸ் இன்ஸ்பெக்டர் இளமையைத் தவற விட்டிருந்தார். கண்களுக்குக் கீழ் சதைப் பைகள்., கழுத்தில் நரம்புகள் எண்ணத் தோதாய் இருந்தன. காது மடல்களில் ரோமம். சின்ன உடம்புக்குக்கச்சிதமில்லாமல் சட்டை கொஞ்சம் தொள தொளா. நாளைய தபாலில் ரிடையர்மெண்ட் ஆர்டரை எதிர்பார்ப்பவராகத் தெரிந்தார். ஆனால் குரலில் அசத்தினார். சரளமான ஆங்கிலத்தில் புருவம் உயர்த்த வைத்தார்.

"என் பேர் பரத்" என்று அறிமுகப்படுத்திக் கொண்ட அடுத்த விநாடியே சடசடவென்று பேசத் தொடங்கி விட்டார்.

"தெரியும். நல்லாத் தெரியும். பார்த்திருக்கேன். பேசினதில்லே. டிபார்ட்மெண்ட்டுக்குப் பல தடவை உதவியிருக்கீங்க. கேள்விப்பட்டிருக்கேன். உங்களைப் பத்தி நிறைய பேசியிருக்கோம். இந்தப் பொண்ணைத்தான் தெரியலே" என்றார் சுசீலாவைக் காட்டி.

"ஆச்சரியமா இருக்கு சார்," என்றாள் சுசீலா.

"ஏம்மா?"

"இவர் தனியா எதையும் கிழிச்சதில்லே! நான்தான் சார் மாஸ்டர் மைண்ட். அவர் குதிரை. நான் ஜாக்கி. ஆனா பாருங்க பேரு குதிரைக்குத்தான். இவரைத் தனியா விட்டா காட்டு வெள்ளம் சார். எதுக்கும் பிரயோஜனப்படாது. எல்லாத்தையும் முட்டி மோதி உடைச்சித் தள்ளிட்டுப் போய்டும். நான் தான் அப்பப்போ அணை கட்டிப் பாசனத்துக்கு உதவற மாதிரி செய்வேன். சுருக்கமாச் சொன்னா நாங்க ப்ரெஸ் பட்டன் மாதிரி."

"புரியலையே..."

"ப்ரெஸ் பட்டன் ரெண்டு பகுதி. ரெண்டும் சேர்ந்தாதான் உபயோகம். தனித்தனியா இருந்தா பயனில்லே பாருங்க."

பரத் குறுக்கிட்டு, "தப்பா எடுத்துக்காதீங்க இன்ஸ்பெக்டர், சச் எ டாக்கட்டிவ் கர்ள், இன்னொசண்ட், ஆனா இண்டலிஜெண்ட்."

"வெல், என்ன விஷயமா என்னைச் சந்திக்க வந்தீங்க பரத்?" என்றார் இன்ஸ்பெக்

டர் நாதன்.

"அசோக் நகர்ல இண்டஸ்ட்ரியலிஸ்ட் நாகராஜன் கொலை சம்பந்தமா பேசணும்."

"சொல்லுங்க."

"இந்த நிமிஷம் கேசோட நிலைமை என்ன? உங்க தியரி என்ன? உங்க எதிர்பார்ப்பு என்ன?"

"இந்தக் கேள்விகளுக்கெல்லாம் காரணம் என்ன?"

பரத் ஒருமுறை நகத்தைப் பார்த்துக் கொண்டு, "கொலை செய்யப்பட்ட நாகராஜன் எனக்கு போன் செஞ்சார்" என்றான்.

"எப்போ பரத்?" என்றாள் சுசீலா.

அவளை ரகசியமாக முறைத்து விட்டு, "'என்னோட கல்யாண ரிசப்ஷன் போது என்னைக் கொலை செய்ய ஒரு முயற்சி நடந்திச்சி. அது சம்பந்தமா உங்க கூட பேசணும். என்னோட எதிரி யாருன்னு எனக்கு அடையாளம் காட்டணும். எப்போ வர்றீங்'கன்னு கேட்டார். மறுநாள் காலையிலே பத்து மணிக்கு வந்து சந்திக்கிறதா சொன்னேன். ஆனா மறுநாள் காலையிலே அவர் கொலை செய்யப்பட்ட செய்தியைத்தான் பேப்பர்ல படிக்க முடிஞ்சது. ரெண்டு நாளா எனக்குள்ளேயே ஒரு உறுத்தல். அவர் போன் பேசின உடனே விஷயத்தோட தீவிரத்தை உணர்ந்து உடனே போய் அவரைப் பார்த்து இருக்கலாமோன்னு ஒரு குற்ற உணர்ச்சி. அப்படிப் பார்த்திருந்தா, ஒருவேளை இந்தக் குற்றம் தவிர்க்கப்பட்டிருக்கலாமோன்னு ஒரு சங்கடமான ஃபீலிங். அதனால்தான் உங்களைப் பார்க்க முடிவு செஞ்சேன்."

"சாதாரணமா இப்போ பதினைஞ்சு ரீலுக்கு மேலே யாரும் படம் ரிலீஸ் பண்றதில்லை. ஆனா ஊமைவிழிகள் பதினெட்டு ரீல் இன்ஸ்பெக்டர்" என்றாள் சுசீலா.

பரத் மெதுவாக மேஜை மறைத்த தன் கையை அவள் தொடையில் வைத்து நறுக்கென்று கிள்ள... "ஆ!" என்றாள் அலறலாய்.

"என்னாச்சு?" என்றார் நாதன்..

"இப்படித்தான் சார், சீரியஸ்னெஸ் புரியாம சம்பந்தமில்லாததைச் சமயத்திலே





''எங்க ஆபீஸ்ல அவ நுழைஞ்ச உடனே எல்லாரும் சீட்லேர்ந்து எழுந்துருவாங்க...!''

''பரவாயில்லையே! பெரிய பதவில இருக்காளா...?''

''நீ வேற... அவதான் எங்க ஆபீஸ்ல குப்பை கூட்றவ...!''

— வி. சாரதி டேச்சு

பேசவா, நீ வெளில மரத்தடியிலே போய் நில்லு. நான் பேசிட்டு வர்றேன்.''

பொய்க் கோபத்துடன் சுசிலா எழுந்து போக, நாதன் கூறினார்:

''இது சிக்கல் இல்லாத கேஸ். அப்பா மேல பையனுக்குக் கோபம். காரணம் ரெண்டு. அப்பா ரெண்டாம் கல்யாணம் செஞ்சுக்கிட்டது, சொத்து பூரா புது மனைவி பேர்ல உயில் எழுதி வச்சது. இதிலே ஆத்திரமாகிச் சம்பவத்துக்கு முதல் நாள் வந்து சத்தம் போட்டிருக்கான். கொஞ்சமும் அசைஞ்சு கொடுக்காம நாகராஜன் பேசினதோட, அறையவும் செஞ்சிருக்கார். ஆத்திரம் இன்னும் அதிகமாகி, மறுநாள் ராத்திரி வந்து தீர்த்துட்டான். போராட்டத்துக்கு நடுவிலே நாகராஜன் இண்டர்காமிலே வெளி கேட்டுக்கருகிலே இருந்த வாட்ச்மேனைக் கூப்பிட்டிருக்கார் உதவிக்கு. அவன் வர்றதுக்குள்ளே முடிச்சிட்டான். அவனைத் தப்ப விடாம பார்த்துக்கிட்டு வாட்ச்மேன் அவசர போலீசுக்குச் சொல்ல... எங்களுக்குத் தகவல் வந்து உடனே போனோம். வீட்ல நாகராஜன் மட்டும்தான் இருந்திருக்கார். அவர் புது மனைவியும், மச்சானும் நாங்க போனதுக்கப்புறம்தான் வந்தாங்க. அந்தப் பையன் அசோக் விசாரணையிலே மறுத்தான். ஸ்பெஷலா விசாரிச்சாதான் சரியா வரும்னு ஜீப்பிலே ஏத்தி ஸ்டேஷனுக்கு அழைச்சுக்கிட்டு வர்றதுக்குள்ளே... நடுவிலே குதிச்சித் தப்பிச்சிட்டான். சீக்கிரம் மாட்டிடுவான். திஸ் ஈஸ் த ஸ்டோரி.''

''சில சந்தேகங்களை நான் தெளிவாக்கிக்கலாமா?''

''ஷ்யூர்.''

''ஆயுதம் கிடைச்சுதா?''

''யெஸ். கத்தி! மார்பிலேயே செருகி நின்னுச்சு.''

''பிரிண்ட்ஸ்?''

''இல்லை.''

''கிளவுஸ் போட்டிருந்தானா?''

''இல்லே. கைரேகை படாம இருக்க ஒரு கர்ச்சீப்பைக் கத்தியோட கைப்பிடியிலே சுத்திக்கிட்டுப் பிடிச்சாக் கூடப் போதும். கிளவுஸ்தான் போட்டுக்கணும்னு அவசியமில்லே.''

''அப்கோர்ஸ், போட்டோஸ் பார்க்கட்டுமா?''

''காண்பிக்கிறேன். எஃப் ஐ ஆர், ஸ்டேட்மெண்ட்ஸ் எல்லாமே படிக்கத் தர்றேன். என்ன உங்க ஐடியா? எதுக்காக விவரம் சேகரிக்கிறீங்க பரத்?''

''இந்தக் கேசிலே நான் உங்களுக்கு உதவ விரும்பறேன் – உங்களுக்கு ஆட்சேபனை இல்லேன்னா, நாகராஜன் என்னை போன்ல கூப்பிட்டுப் பேசியும் அவருக்கு என்னால் உதவ முடியாமல் போனதாலே குற்றவாளியைக் கண்டுபிடிக்கிறதிலே உங்களுக்கு உதவினா என் மனசுக்கு ஓர் ஆறுதல் கிடைக்கும்.''

''புரியுது'' என்று டிராயரை இழுத்தார் நாதன்.

நாற்பது நிமிடம் கழித்து ஸ்டேஷனை விட்டு வெளியே வந்த பரத் தன் பைக்கைக் காணாமல், மரத்தடியில் சுசிலாவையும் காணாமல் திகைக்க...

தட்தட் என்று வந்து நிறுத்தினாள் சுசிலா. ''ஏறிக்கங்க பரத். டாப் கியர்ல வண்டி லேசா உதறுது. கவனிங்க. இருங்க. ஏறும் முன் ஒரு வார்த்தை சொல்லுங்க. என்ன உங்க அனுமானம்? அசோக் குற்றவாளியா, நிரபராதியா?''

''நிரபராதி'' என்றான்.

''அப்போ?''

''ஆணி வேர் வரைக்கும் தோண்டிடறதுன்னு முடிவு பண்ணியாச்சு. பார்த்து ஓட்டு'' என்று அவள் பின்னால் அமர்ந்து கொண்டான் பரத்.

புடைவையை லோஹிப் செய்து கொண்டாள். பல்லில் கடித்துக் கொண்டிருந்த பின்னை எடுத்து ஃப்ளீட்சில் உள்பக்கம் போட்டுக் கொண்டாள். கண்ணாடியில் ஒட்டி வைத்திருந்த லெவண்டர் நிற ஆட்டீன் பொட்டை எடுத்துப் புருவ மத்தியில் ஒட்டிக் கொண்டாள். ஹேண்ட் பேகைத் தோளில் மாட்டிக்கொண்டு, அதன் சைடு பகுதியில் வார இதழைச் செருகிக் கொண்டு புறப்பட்டாள் பிரேமா.

அறையை விட்டு வெளியேறி, ஹாஸ்டலை விட்டு வெளியேறி, ஆட்டோவில் அமர்ந்து கொண்டாள்.

ஆட்டோ புறப்பட்டதும்... பத்து விநாடிகள் இடைவெளி விட்டுத் தனது பைக்கைச் செலுத்தினான் தாமஸ்.

(தொடரும்)

# ஸ்ரீராம் வழங்கும் விஜயதசமி அன்பளிப்புகள் !

விஜயதசமி நாளான
12.10.86 முதல்
31.10.86 வரை
ரூ.5.000 அல்லது அதற்கு
மேல் டெபாசிட் செய்யும்
எல்லா புதிய டெபாசிட்டர்களுக்கும்
பல புதிய அன்பளிப்புகள்
வழங்குகிறோம்.

- வெள்ளியில் 'லக்ஷ்மி திருஉரு' பதித்த நவீன பூஜை ஸ்டாண்ட்: பூஜைக்கு உகந்தது.
- **HAMLYN JUNIOR ENCYCLOPEDIA:** 1000-க்கு மேல் பல வண்ணப் படங்கள் கொண்ட அறிவுக் களஞ்சியம்.
- 10-கிராம் வெள்ளிப் பதக்கம்: பூஜையிலும், பணப் பெட்டியிலும் வைத்துப் பாதுகாக்க ஏற்றது.
- **MACMILLAN STUDENT'S DICTIONARY:** கண்கவர் படங்களுடன் கருத்தை விளக்கும் சொல்லகராதி.

















1) பிக்ஸெட் டெபாசிட் & சிறப்புத் திட்டம்: குறைந்தபட்சம் ரூ.5000

| டெபாசிட் காலம் | மாதா மாதம் வட்டி பெற | 6 மாதங்களுக்கு ஒருமுறை வட்டி பெற | டெபாசிட் முதிர்வடையும் போது வட்டி பெற |
|---|---|---|---|
| 1 ஆண்டு | 14.0% | 15.0% | 15.5% |
| 2 ஆண்டுகள் | 14.5% | 15.5% | 17.5% |
| 3 ஆண்டுகள் | 15.0% | 16.0% | 20.0% |

இன்னும் ஒரு சிறப்புத் திட்டம்: உங்கள் டெபாசிட் 4½ ஆண்டுகளில் இரட்டிப்பாகும்!

2) ரெகரிங் டெபாசிட் திட்டம்:
மாதந்தோறும் ரூ. 125 வீதம் 36 மாதங்களுக்கு டெபாசிட் செய்தால், டெபாசிட் முதிர்வடையும் போது ரூ. 5710 திரும்பப் பெறலாம்.

இத்திட்டத்தில் சேர்ந்தால் MACMILLAN STUDENT'S DICTIONARY அன்பளிப்பாக பெறலாம்.

இந்த அன்பளிப்புத் திட்டங்கள் அக்டோபர் 12 முதல் 31 வரை எமது எல்லா அலுவலகங்களிலும் உண்டு.

## ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

*(சென்னை ஸ்ரீராம் குருப் பைனான்ஸ் கம்பெனிகள் சார்பாக)*




பதிவு அலுவலகம்: 123, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை-1. போன்: 21401, 21402
நிர்வாக அலுவலகம்: 54, வடக்கு உஸ்மான் சாலை, தி.நகர்,
சென்னை-17. போன்: 446688/441715
தலைமை நிர்வாக அலுவலகம்: 'ஸ்ரீராம் ஹவுஸ்',
10, கஸ்தூரி எஸ்டேட், சென்னை-86 போன்: 454805
கிளைகள்:
சென்னை: ● அடையாறு ● அண்ணா நகர் ● மவுண்ட் ரோடு ● மைலாப்பூர்
பெங்களூர்: ● 142, K.H. ரோடு, போன்: 223637 ● 49, மல்லேஸ்வரம் சர்க்கிள்
மைசூர்: 546, சாமராஜா டபிள் ரோடு, போன்: 34766
நெல்லூர்: 5/944, ஸ்டோன் ஹவுஸ் பேட், போன்: 6210

ரெசிடெண்ட் மேனேஜர்கள்:
● கோயம்புத்தூர் ● திருச்சி ● மதுரை ● சேலம் ● பாண்டிச்சேரி ● விசாகப்பட்டினம் ● தூத்துக்குடி ● நாகர்கோயில் ● காஞ்சீபுரம் ● நாகப்பட்டினம் ● புதுக்கோட்டை.

**ஸ்ரீராம் சேமிப்பில் சேருங்கள். சீரும் சிறப்புமாய் வாழுங்கள்.**

ADWAVE/SI/3191 B

# ஓர் வேண்டுகோள்



சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, இருப்பிடம், கல்வி அளித்து வரும் சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் ஆண்டு தோறும் தீபாவளி அன்று குழந்தைகளுக்கு புத்தாடை, பட்டாசுகள், இனிப்புகள் வழங்கி தீபாவளியை சிறப்பாக கொண்டாட பொது மக்கள் பண உதவியோ அல்லது பொருளுதவியோ கொடுத்து உதவும்படி கேட்டுக் கொள்கிறோம்.

தாங்கள் ஆதரவற்ற குழந்தைகளுக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களை ஒரு புதிய பாதையில் கொண்டு செல்லும் ஆசிரமத்தின் அரியதொரு செயலையும், திக்கற்ற முதியோர்களுக்கு அடைக்கலம் கொடுத்து வருவதையும், அறிந்திருப்பீர்கள் என்று நினைக்கிறோம். எனவே இது சம்பந்தமாக தாங்கள் அளிக்கும் உதவி ஆதரவற்ற குழந்தைகளுக்கும், ஆசிரமத்தில் இருக்கும் முதியோர் இல்லத்தின் முதியோர்களும், இல்லக் குழந்தைகளும் மன மகிழ்ச்சியுடன் தீபாவளி திருநாளைக் கொண்டாட அவர்களுக்கு புத்தாடைகள், பட்டாசுகள், இனிப்புகள் வழங்க ஏதுவாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

பொது மக்கள் அளிக்கும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும் அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியை பணம் அல்லது பொருட்களாக

**நிர்வாகி,**

**சிவானந்த 'சரஸ்வதி சேவாஸ்ரமம்,**

நெ. 20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை-600059

# பகைவனை ஆளுவும்...

அன்று அலுவலகம் ஏக அமர்க்களத்தில் மூழ்கியிருந்தது!

அக்கௌண்டன்ட் விஷ்ணு என்கிற விஷ்ணுவர்த்தன் தன்னுடைய கல்யாணம் முடிந்து பதினைந்து நாள் கழித்து முதன் முறையாக ஆபீஸ் திரும்பியிருந்ததுதான் அதற்குக் காரணம்.

"டேய் விஷ்ணு... உங் கல்யாணத்துல, அந்தப் பால் பாயசம் ரொம்பப் பிரமாதம்டா... அதைவிட அந்த குலோப் ஜாமூன் இருக்கே... அடா... அடா...!" — இப்போது நினைத்துக்கொண்டு, கல்யாண விருந்தையே பால் பாயசத்திலுள்ளும் குலோப் ஜாமிலும் அடக்கினான் பிரகந்தரான்.

"உம், பெண்டாட்டி ரொம்ப சோஷியல் டைப் போல இருக்கு...! நான் பார்த்த மாத்திரத்திலே புரிஞ்சுகிட்டேனுக்கும்! விசு... நன்மையிலேயே நீ கொடுத்து வச்சவன்டா...!"

— இது லெட்ஜர்கிளார்க் ராமச்சந்திரன்.

"டியர் விஷ்ணு... உங்க புதுப்பெண்டாட்டி கிட்டே வீண் பிடிவாதம் இருக்கும் போல இருக்கே! ஏன் கல்யாணமான இந்தப் பதினைஞ்சு நாள் அனுபவத்திலே நீங்களே புரிஞ்சுகிட்டிருப்பீங்களே...?"

— டைப்பிஸ்ட் மாலினியின் பேச்சில் பொறுமை மின்னியது. அவளுக்குக் கடந்த இரண்டு வருடங்களாகவே, விஷ்ணு தன் மாலையில் மயங்கவில்லையே என்ற ஏக்கம் மனத்துக்குள்ளேயே இருந்துவந்தது! அதனால்தான் இப்படிச் சொன்னாள்.

"ச்சே... ச்சே... அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லையே...!"

இந்த அமர்க்களங்களிலெல்லாம் துளியும் பங்கு கொள்ளாது, இதையெல்லாம் கண்டும் காணாதவன் போல் தன் ஸ்டூலில் அமர்ந்து நெளிந்து கொண்டிருந்தான் வாசு.




கா.சு. வேலாயுதன்

— அவன் இந்த இண்டர்நேஷனல் இம்போர்ட் கம்பெனி அலுவலகத்தின் சாதாரண பியூன். அவனுக்கும், இப்போது கல்யாண காரியம் முடித்திருக்கும் விஷ்ணுவர்த்தனுக்கும் ஒரு வருடம் முன்பு ஏற்பட்ட ஒரு பிரச்னையில் மனஸ்தாபம் ஏற்பட்டு — கைகலப்பு வரை கொண்டு போய் விட்டு விட்டது!

வாசு அந்த அலுவலகத்தில் சாதாரண பியூனாக இருந்தாலும், அங்கு அனைவரிடத்திலும் கண்ணியமாகப் பழகி வந்தான். பத்து வருடங்களாகப் புன்முறுவல் மாறாது, அலுவலக சிப்பந்திகளுக்கு மனம் கோணாது ஊழியம் செய்து வந்ததனால், அந்தக் கம்பெனி மானேஜர் முதற்கொண்டு சாதாரண கிளார்க் வரை அனைவரும் அவன்மேல் தனிப் பிரியம் வைத்திருந்தனர்... அப்பேர்ப்பட்ட வாசுவா... இந்த விஷ்ணுவர்த்தனுடன் சண்டை பிடித்தான்?

— எல்லோருக்குமே இதுதான் ஆச்சரியமாயிருந்தது!

எல்லோருடனும் நெருங்கிப் பழகும் வாசு, ஒரு வருடம் முன்பு விஷ்ணுவர்த்தனுடனும் நன்றாகப் பழகிக் கொண்டுதானிருந்தான்! விஷ்ணு வாசுவை விட ஐந்தாறு வயது சிறியவன். இருந்தாலும் அவன் அக்கௌண்டன்ட்டாயிற்றே...! தகுந்த மதிப்பையும், மரியாதையையும் தவறாமல் அளித்து வந்தான் வாசு.

இது இப்படியிருக்க....

அந்தக் குறிப்பிட்ட நாளில் வாசுவுக்கு வேலைப் பளு மிக அதிகமாயிருந்தது! ஆபீஸில் அனைவரும் ஏவிய வேலைகளைத் திருத்தமாகச் செய்து முடித்துவிட்டு, அவன் நிமிரும்போது பகல் ஒரு மணி. ஏறத்தாழ அனைவரும் சாப்பிடச் சென்றுவிட்ட நேரம் —

பாத்ரூம் சென்றவன் அங்கு விஷ்ணுவின் குரல் கேட்டு சற்று நிதானித்தான். விஷ்ணு பேசிய பேச்சுக்கள் அவனைப் பற்றியதாக இருக்கவே அப்படியே நின்று கூர்ந்து கவனித்தான்.

"ஏன் டாக்டர், இவ்வளவு நேரமா என் உடம்பெல்லாம் சோதிச்சுப் பார்த்த பிறகு மறுபடியும் இப்போ சோதிக்கணும்னு சொல்றீங்க..."

"இவ்வளவு நேரமும் பணம் வச்சிருக்கியான்னு சோதிச்சேன். இனிமேல் தான் உடம்பைச் சோதிக்கணும்!"

— தே. ஏ. சார்லஸ்



"அது பாரு சோமு... நம்ப பியூன் வாசுவைப் பத்தி அவ்வளவு பிரமாதமா எங்கிட்டே சொல்லாதே...! இல்லே தெரியாமத்தான் கேக்கறேன், அவன் கல்யாணம் பண்ணி என்னத்தைக் கண்டான்...? பத்து வருஷமாச்சு. கல்யாணம் செஞ்சு... ஏதாவது ஒரு குழந்தை, குட்டி... ம்கூம்... ஒண்ணுமேயில்லே! என்னைக் கேட்டா அவன் 'அதுக்கு' லாயக்கில்லேன்னுதான் சொல்லுவேன்...!"

"என்னப்பா விஷ்ணு, இப்படிச் சொல்றே...? அவன் ஆம்பிளேயில்லேன்னு நீ சொல்றதே பெரிய தப்பு. அவன் ஏதோ எதிர்கால குறிக்கோளோட தனக்கு இப்போதைக்குக் குழந்தை வேண்டாம்னு இருக்கலாம்ல...?"

வாசுவைப் பற்றிப் புரிந்து கொண்டவர் போல் பேசினார் ஹெட்கிளார்க் சோமு.

"அது என்ன பத்து வருஷமாவா...? அட போப்பா... அவன் நடையுடை பாவனையைப் பார்த்திருக்கியா? அசல் 'அலி' மாதிரியில்ல இருக்கு?"

அவர்களின் சம்பாஷணைகளைக் கேட்டு, உண்மையிலேயே அதிர்ந்து போனான் வாசு. அதற்கு மேல் அவர்களின் பேச்சுக்களைக் கேட்டுக் கொண்டு பொறுமையாக நிற்க முடியவில்லை அவனால்.

"என்னடா சொன்னே...?"

— என்று கத்தியபடி பாத்ரூமினுள் பாய்ந்தான். பாய்ந்த வேகத்தில் விஷ்ணுவின் சட்டை அவன் கைகளில் சிக்கிக் கிழிபட, இருவரும் கைகலப்பில் மிதக்க ஆரம்பித்தனர். கிளார்க் சோமு அவர்களைத் தடுக்க முடியாமல் திணற, ஆபீஸே திரண்டு வந்து அவர்களை விலக்கிவிட்டது!

... அதிலிருந்து,

விஷ்ணு வாசுவின் முகத்தை ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. எனவேதான் அவனுக்குத் திருமண அழைப்பையே தரவில்லை.

உண்மையிலேயே வாசு ஆண்மையற்றவனல்ல! அவனுக்குச் சம்பளம் வெறும் முந்நூற்றைம்பது ரூபாய்தான். அந்தச் சம்பளத்தில் அவன் அம்மா, விபத்தில் இறந்து போன அண்ணன் – அண்ணியின் இரண்டு குழந்தைகள் ஜீவனம் செய்ய வேண்டியிருந்தது! எனவேதான் தனக்குக் குழந்தையே வேண்டாம் என்ற எண்ணத்தில் இருந்து வந்தான். அவன் மனைவி அமராவதி எவ்வளவோ தூரம் அவனிடம் தன் குழந்தை ஆசையைத் தெரிவித்தும், அதை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டான்.

விளைவு —

இப்படி நினைத்தவர்களெல்லாம் கேலி பேசும் நிலைக்கு ஆளாகி விட்டான். விஷ்ணுவுடன் சண்டை போட்ட அன்றுதான் மிக ஆழமாக இதைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தான்.

'கேவலம்... நாம் எப்படி இருந்தால் இவர்களுக்கென்ன....? குழந்தை பெற்றால் என்ன, இல்லாவிட்டால் என்ன? நான் ஆண்மையில்லாதவனாம்... அலியாம்...!'

# ஸிபாகா டூத்ப்ரஷ் மற்றெந்த சாதாரண டூத்ப்ரஷ்களையும்விட கூடுதல் பாதுகாப்பானது.

## ஏன் என்பதை, நீங்களே காணலாம் !




ஸிபாகா பேபி

ஸிபாகா ஜூனியர்

ஸிபாகா ஸ்டாண்டர்ட்

ஸிபாகா ஆங்குலர் டீலக்ஸ்

ஸிபாகா ட்ரான்ஸ்பேரன்ட் ஆங்குலர் டீலக்ஸ்

எத்தனை வண்ணங்கள்!
எத்தனை தினுசுகள்!

**ஸிபாகா**

இந்தியாவில் அனைத்திலும் அதிக விற்பனையுள்ள டூத்ப்ரஷ்.

ULKA-HCG-CT-1-86 TAM



# பாம்பே டையிங்



## பாம்பே டையிங்
## வெகு நாகரீகமான
## துணிகளுக்கு பெயர் பெற்றது
## இந்த உண்மையை முற்றிலும்
## தீபாவளியில் காணலாம்

தீபாவளிக்கென
இதோ வந்துவிட்டன!
நீங்களும் உங்கள்
குடும்பத்தினர் அனைவரும்
ஆவலுடன் அணிய
எதிர்பார்த்திருந்த நவீன
பாம்பேடையிங் ஃபேஷன்
துணி ரகங்கள். அனைத்தும்
புதியவை. தரத்தில்
சிறந்தவை. புடவைகள்
சூட்டிங்குகள்
சர்ட்டிங்குகள்

டிரஸ் பிரிண்ட்டுகளில்
புத்தம் புதிய டிசைன்கள்.
பாலியெஸ்டர், காட்டன்
துணிகளில் அதி நவீன
டிசைன்கள் அனைத்தும்
மில் நிச்சயித்த விலைகளில்
இதுவே
உங்களுக்கு
பாம்பே டையிங்
தரும்
உத்திரவாதம்.

உங்கள் சேவைக்கெனவே பாம்பே டையிங் 90க்கும் அதிகமான ஷோரூம்களும், 750-க்கும் அதிகமான டீலர்களையும் கொண்டதாகும். நினைவிருக்கட்டும்! நீங்கள் எங்கிருந்தாலும், உங்கள் அருகாமையிலேயே ஒரு பாம்பே டையிங் துணிக்கடை உண்டு.

விநியோகஸ்தர்கள் : **சிவ்ராம்ஸ் அசோசியேட்ஸ்/சிவ் சேல்ஸ்**

கோவை-641 011 சென்னை-600 017.

Bankers : The Federal Bank Limited.

**பாம்பே டையிங் BOMBAY DYEING**

இப்போது —

அவன் மனைவி நிறைமாத கர்ப்பிணி...

அலுவலகத்தில்...

விஷ்ணுவின் புதுமண வாழ்க்கை பற்றிய அமர்க்களங்கள் ஊழியர்களுக்குள் அடங்க வெகுநேரமாகிவிட்டிருந்தது! வாசு அந்த அமர்க்களங்களையெல்லாம் பார்த்து மனத்துக்குள்ளேயே புழுங்கிக் கொண்டிருந்தான். அலுவலகத்தில் யாரும் ஒரு வார்த்தை கூட இவனிடம் வந்து இதுபற்றி ஏதும் பேசவில்லை! வருபவர்கள் எல்லாம் அவனுடனேயே கொஞ்சிக் கொண்டிருந்தனர்.

'ச்சே... என்னதான் சண்டை இருக்கட்டும்... தன் கல்யாணத்துக்குக் கூடப் பத்திரிகை கொடுக்கவில்லையே, இவன்? என்ன மனிதன் இவன்! அப்படி அழைப்பிதழ் தந்திருந்தால், பழைய கோபம் தணிந்து நாம் போயிருக்க மாட்டோமா, என்ன...? அப்படித்தான் நம்மிடம் தவறிருந்தால், அவனிடம் மன்னிப்புக் கேட்பது முறை! அவனே தன்னைப் பற்றி வேண்டாத விஷயங்களைப் பேசிவிட்டு...!

'...சரி, மன்னிப்புக் கேட்க வேண்டாம்... வாசு என் கல்யாணத்துக்குக் கட்டாயம் வந்துடு... பழைய கோபத்தை மறந்துடு...' என்று சொல்லியிருந்தால் குறைந்தா போய் விடுவான்? நம்மை ஆபீஸில் எல்லோரும் இப்படி ஒதுக்கித் தள்ளும் அளவு கேவலம் அடையச் செய்து விட்டானே...!'

— மனம் ஒவ்வொன்றாய்ச் சிந்தித்துக் கொண்டிருக்க, ஃபைல்களை அவரவர் மேஜையில் ஒழுங்குபடுத்தித் தன் அலுவல்களைத் தொடர்ந்து கொண்டிருந்தான்.

அந்தச் சமயத்தில் —

''வாசு...!'' மானேஜரின் அழைப்புக் குரல் கேட்டு, அவசரமாக அவர் அறைக்கு ஓடினான். அவன் உள்ளே நுழைந்த சமயம் 'போனை'க் கையில் வைத்திருந்த மானேஜர் புன்சிரிப்புடன் —

''வாசு... உனக்கு ஃபோன். உன் மாமனார் பேசறார்... உன் ஒய்ஃபை டெலிவரிக்காக ஹாஸ்பிடல்ல அட்மிட் பண்ணியிருக்காராம்...'' என்று கூறியபடி போனை அவனிடம் தந்தார்.

உற்சாகமாகத் தொலைபேசியில் சிறிது நேரம் பேசிய வாசு...

''அப்படியா... அப்பச் சரிங்க... இதோ நான் உடனே வந்துடறேன்...!''

— என்று போனை வைத்தவன் மானேஜரைப் பணிவுடன் அணுகினான்.

''ஐயா... என்னை என் மாமனார் உடனே ஆஸ்பத்திரிக்கு வரச் சொல்றார்... நான் இப்பவே போகணும்... பர்மிஷன் கொடுங்க சார்...!''

''அப்படியா? தாராளமாப் போயிட்டு வா...!''

''அப்புறம்... நான் ரெண்டு நாளைக்கு முன்னால கேட்டேனே... அட்வான்ஸ்...!''

— கேட்டபடி தலையைச் சொறிந்தான். இதை எதிர்பார்த்தவர் போல் மானேஜர் பீரோவைத் திறந்து ஐந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எண்ணி அவன் கையில் திணித்தவர்,

''வாசு... உனக்கு மகன் பிறக்க என் அட்வான்ஸ் வாழ்த்துக்கள்...!'' — என்றபடி விடைகொடுத்தார்.

அவர் அறையை விட்டு வெளியே வந்த வாசு அலுவலகத்தில் விஷ்ணுவர்த்தனின் கல்யாண அமர்க்களங்கள் இன்னும் ஓயாதிருக்கவே யாருடனும் சொல்லிக் கொள்ளாமலேயே அங்கிருந்து வெளியேறினான்.

இரண்டு நாள்...

மூன்று நாள்...

என நாட்கள் கழிந்தன. ஆபீஸ் பியூன் வாசு இல்லாமல் மானேஜரிலிருந்து அனைவருக்குமே எடுபிடி வேலைக்கு ஆளில்லாமல் வெகு சிரமமாயிருந்தது! சரியாக ஒரு வாரம் கழித்துத்தான் உற்சாகமாக அலுவலகம் திரும்பினான் வாசு.

அன்று அங்கு அனைவருடைய பார்வையும் அவன் மீதே புதைந்திருந்தது!

''என்னப்பா வாசு... பையனா, பொண்ணா...?''

''வரவா... செலவா...?''

''குழந்தை அம்மா ஜாடையா...? இல்லே அப்பா ஜாடையா...?''

— எல்லோரும் கேள்வி கேட்டபடி அவனைச் சூழ்ந்து கொள்ள, தான் கொண்டு வந்திருந்த கற்கண்டுத் தட்டை ஒவ்வொருவரிடமும் பொறுமையாக நீட்டியவன்...

''சார்... எனக்கு மகன் பிறந்திருக்கான்...!'' — என்று ஒவ்வொருவரிடமும் தன் சந்தோஷச் செய்தியைச் சொல்லிக் கொண்டே வந்தான். அதை ஒவ்வொருவரிடமும் சொல்லும் பொழுதும், அவனிடம் பாரபட்சமின்றிக் கேலி பேசிக் கொண்டே கற்கண்டை எடுத்துக் கொண்டனர் அலுவலர்கள்.

அதையெல்லாம் வைத்த கண் வாங்காமல் வெறித்து நோக்கியபடி தன் இருக்கையில் அமர்ந்திருந்தான் அக்கௌண்டன்ட் விஷ்ணுவர்த்தன்.

புதுமாப்பிள்ளையாக ஆபீஸில் வளைய வந்த அவன் இப்போது பழைய மாப்பிள்ளை ஆகிவிட, இப்போது அனைவரும் வாசுவிற்கு மகன் பிறந்த செய்தியை கற்கண்டாகச் சுவைத்துக் கொண்டிருப்பது, அவன் மனத்தில் எரியாத நெருப்பைப் பரவ விட்டுக் கொண்டிருந்தது!

இதோ...

வாசு அவனை நெருங்கிவருகிறான். விஷ்ணுவர்த்தனின் இருக்கைக்கு அருகில் இருந்த ஆடிட்டர் பரந்தாமனிடமும் கற்கண்டை நீட்டுகிறான். அவரிடம் ஏதோ சொல்லுகிறான், அவர் உடனே குபீரெனச் சிரிக்கிறார். அவனும் சிரித்துக்கொண்டே அவரிடமிருந்து நகர்ந்து இவனிடம் வருகிறான்.

இல்லை...

இவனைத், தாண்டியிருந்த டைப்பிஸ்ட் மாலாவிடம் செல்லுகிறான். கற்கண்டை அவளிடமும் நீட்ட, அவளும் அதை எடுத்துத் தன் வாய்க்குள் அடக்கிக் கொண்டு விஷ்ணுவர்த்தனின் எரிச்சலை அதிகப்படுத்தும் வித

மாக வாசுவிடம். ஜோக்கடிக்கிறான் — சிரிக்கிறான்... அவனும் இவனைக் கடிக்காத குறையாகச் சிரித்துவிட்டு மானேஜர் அறையை நோக்கிச் செல்கிறான்...

இப்போது, விஷ்ணுவர்த்தனுக்கு இரண்டு பக்கங்களிலும் ஓர் ஆணும், பெண்ணும் தம் வாயில் வாசுவின் கற்கண்டை அடக்கிக் கொண்டு, சுவைத்துக் கொண்டிருக்க, அவனின் மனம் முழுவதும் கசப்பேறுகிறது!

'ச்சே... நாம நம் கல்யாணத்துக்கு இவன் மேல கோபப்பட்டு, அழைப்பிதழ் கொடுக்காம இருந்தது எத்தனை தவறு...? நாம இவன் கண்மறைவா நம் ஆபீஸ் ஒர்க்கர்ஸுக்குக் கல்யாண விருந்து தந்தோம்! ஆனா இவன்... என் கண் முன்னாலேயே எல்லோருக்கும் கற்கண்டைக் கொடுத்து, நமக்குக் கொடுக்காமல் கேவலப்படுத்திவிட்டானே! அப்படி நமக்குக் கொடுத்திருந்தால் குறைந்தா போய் விடுவான்?'

வாசுவின் செய்கையை உணர்ந்து வெட்கிய அவன், தன்னைத்தானே மனத்தால் நொந்து கொண்டான். அதற்குமேல் அங்கு உட்காரப் பிடிக்காமல் தலையைத் தொங்க விட்டுக் கொண்டே பாத்ரூமினுள் சென்று மறைந்து கொண்டான்.

அவன் உள்ளத் தடுமாற்றத்தைத் தூரத்தே நின்று கவனித்துக் கொண்டிருந்த வாசு, இதை ஏற்கெனவே உணர்ந்தவன்போல், அவன் பின்னாலேயே சென்று அவன் முன்னால் நின்றான்.

''சார்... விஷ்ணு சார்...! எனக்குப் பையன் பொறந்திருக்கான்! கற்கண்டு எடுத்துக்குங்க...!'' — தட்டை நீட்டினான்.

விஷ்ணுவுக்கு வாசுவின் செய்கை, தடுமாறச் செய்த மனத்தை மேலும் தடுக்கி விழ வைத்தது.

''வாசு... நீ... நீ...!'' — வாய் குளறச் சிறிது நேரம் அவனையே பார்த்தவன், கண்களில் நீர் தளும்ப, தட்டில் இருந்த கற்கண்டை நிதானமாக எடுத்து வாயில் போட்டுக் கொண்டான். வாசு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

''விஷ்ணு சார்... ஒரு தனி மனுஷனோட பதவியைப் புரிஞ்சுக்கிறதைவிட அவன் மனசைப் புரிஞ்சுக்கறதுதான் ஒவ்வொரு மனுஷனோட கடமை! நீங்க உங்க கல்யாணத்துக்கு என்னைக் கூப்பிடாததற்கு நான் எவ்வளவு வேதனைப்பட்டிருப்பேன்னு, இப்போ, கொஞ்ச நேரத்திலே புரிஞ்சிட்டிருப்பீங்களே...? உங்களோட சந்தோஷத்துல என்னைப் பங்குதாரனாக்கிக்க உங்களுக்கு விருப்பமில்லாட்டியும், என்னை மாதிரி உங்களைத் தவிக்கவிட என் மனசு ஒத்துக்கலே...! சந்தோஷங்கறது ஒவ்வொருத்தர் வாழ்க்கையிலும் மாறி, மாறி வர்றது! அதைப் பகைவனோடும் பகிர்ந்துக்கறதுதான் பண்பாடு. சார்... காற்றுதான் திசை மாறி வீசணும்னு இல்லே... சந்தோஷங்களும் திசை மாறி வீசக் கூடியதுதான்... இதை இப்பவாவது புரிஞ்சுக்குங்க...!''

# கோடை மழை

கண்களில் கனவுகளுடன், கால்களில் சதங்கை போடும் துடிப்பான கலைஞர்கள் பற்றி ஏற்கெனவே தமிழில் படங்கள் வந்தாயிற்று. காதலையும், காமத்தையும் கலக்காமல் அக்மார்க் முத்திரையிட்டிருப்பது இந்தப் படத்துக்குச் சிறப்பு.

'நாட்டியத்தை நீ சிறப்பாக் கத்துக்கணும். வெளிநாட்டுல போய் ஆடிப் புகழ் சேர்க்கணும். அதுதான் இந்த அம்மாவின் ஆசை' என்று பரிவு வழியும் குரலில் மகளுக்கு ஆசிகளை வழங்கி, தன் கையால் சதங்கை கட்டிவிடப் பிரியப்பட்ட நேரத்தில், பறவை பறக்கும் உயரத்திலிருந்து அந்த அம்மா கீழே விழும் பொழுது நம் நெஞ்சில் ஒரு திடுக். இரண்டொரு காட்சியானாலும் சோபிக்கத் தெரிந்தவர் லட்சுமி.

அம்மாவை இழந்து விட்டுக் குடிகார அண்ணனிடமும், கவர்ச்சி நடிகையான அண்ணியிடமும் வந்து சேரும் அபாக்கியப் பெண்ணாக புதுமுகம் வித்யா. நாட்டிய மாணவி என்பதால் முகபாவங்கள் சுலபம். அரசு அதிகாரிகளுக்கு எதிரில் ஆடும் அந்த நாட்டியம், வெல்டன்! ஆனால் குடும்பத்தில் பாசம் பொழிய யாரும் இல்லை என்பதற்காகக் கைகளை மெல்ல மெல்ல வீசி, சாவி கொடுத்த பொம்மை கணக்காய் மகா நிதானமாய் நடந்து கொண்டே...... இருக்கும் போது எரிச்சல் வருகிறது. காமிரா சிந்தனை முற்றிலும் விலகி விட்டால் இன்னும் சிறப்பாயிருக்கும்.

வித்யாவின் நண்பனாக வரும் மாஸ்டர் நாகேஷ், துடிப்பான பையன். புது சைக்கிள் வாங்கப் பழசை ஒளித்து வைப்பது, போனில் ஹிந்திப்பட சான்ஸ் என்று சொல்லி அனுவை ஏமாற்றுவது என்று ஏக குஷியாகச் செயல்படுபவன், தன் நண்பிக்கு எந்த உதவியும் செய்ய இயலாத நிலை வரும்போது, துக்கத்தில் முகம் கோண அழும் காட்சியில் இளகிய பாகு.

ஏக இனிஷியல்களோடு படத் தயாரிப்பாளராகப் பவனி வரும் செந்தில், மகா ஜாலி. வார்த்தைக்கு வார்த்தை 'எழவு' போட்டுப் பேசிக் குலுங்க வைக்கிறார்.

ஜெய்சங்கர் கௌரவமான மனிதர். நாட்டியம் கற்றுக் கொள்ளும் மாணவியின் பேரில் பாசம் வைக்கிறார். அவள் வீட்டில் அவமானப்படும் போது, குன்றிப் போகிறார். அவளுடைய சிகிச்சைக்காக அவள் அண்ணனை இழுத்து வர மதுக்கடைக்குப் போகும் போது அவசரப்படுகிறார். அவன் போதை நிலையில் இழுத்துப் பேச, பளார் என்று வைக்கிறாரே, அவன் கன்னத்தில் ஓர் அறை! நம்மைக் குலுக்குகிறது!

அந்த அண்ணன் மனம் திருந்தியபின் மனைவியைத் தண்ணீரில் தள்ளி, தானும் குதித்துத் தற்கொலை(?) செய்து கொள்வது கதையில் ஓர் அவசர அமெச்சூர்த்தனம். கண் பார்வையைப் பாதிக்கும் விபத்து இன்னும் கொஞ்சம் அழுத்தமானதாக இருந்திருக்கலாம்.

தூறல்.

— ஜெயமன்மதன்



# தூண்போல் துணைகள் எங்களின் பின்னால்.




இன்டக்ரேடட் ஃபைனான்ஸ், லீஸிங் உலகில் மிகுந்த நல்ல பெயர் உள்ள நிறுவனம். நம்பத்தகுந்ததும் லாபகரமானதும். சுருங்கக் கூறினால் வேகமாக முன்னேறும் நிறுவனங்களில் இதுவும் ஒன்று. முதல் பங்கு விற்பனை அறிவிப்பே 19 தடவைகளுக்கு மேல் விற்றுத் தீர்ந்துவிட்டது! மிக அண்மையில் ரூ. 4 கோடிக்கு வெளிவந்த மாற்றிக் கொள்ளக் கூடிய கடன் பத்திரங்கள் குறியிடப்பட்ட அளவுக்குமேல் விற்றன. ரூ. 9 கோடி தொழில் முதலீடு இதுவரை செய்யப்பட்டுள்ளது. மேலும் ரூ. 6 கோடிக்கான வியாபார ஆயத்தங்கள் நடந்து வருகின்றன. சுருங்கக் கூறினால் இன்டக்ரேடட் ஃபைனான்ஸ், விரைவான முன்னேற்றமும் வளர்ச்சியும் அடைந்து வருகிறது.

தொழில் உலகில் சிறந்து விளங்கும் MRF, OEN, Reunion Engg., Malayala Manorama, Badra Coffee Estate மற்றும் Balanoor Tea and Rubber போன்ற நிறுவனங்கள், இன்டக்ரேடட் ஃபைனான்ஸில் முதலீடு செய்துள்ளனர். சிறந்து செயல்படும் டைரக்டர்களும் உள்ளனர்.

**டைரக்டர்கள் குழு**

| | | |
|---|---|---|
| **கே.எம். பிலிப்** தலைவர் | முழு நேர இயக்குநர் | எம்ஆர்எஃப் லிமிடெட் |
| **வி.எஸ். நடராஜன்** (முன்னாள் தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர், பாரதீய ஸ்டேட் பாங்க்) | இயக்குநர் | ரேமாண்ட் உல்லன் மில்ஸ் லிட். நிர்லான் ஸின்தெடிக் ஃபைபர் & கெமிகல்ஸ் லிமிடெட் |
| **கதிர் கே. தாக்கர்ஸே** | தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர் | ஹிந்துஸ்தான் ஸ்பின்னிங் & வீவிங் மில்ஸ் லிமிடெட் |
| | இயக்குநர் | ஸீமன்ஸ் இந்தியா லிமிடெட் |
| **கே.ஏ. மாத்யூ** | நிர்வாக இயக்குநர் | OEN இந்தியா லிமிடெட் |
| **ஜகதீஷ் கே. முன்ஷி** | இயக்குநர் | ஜெனித் ஸ்டீல் பைப் & இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் |
| **பி.கே. கோஷி** | தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர் | ரீயூனியன் இஞ்சினீயரிங் கம்பெனி (பி.) லிமிடெட் |
| **கே.ஏ. வருகீஸ்** | இயக்குநர் | எம்எம் ரப்பர் கம்பெனி லிமிடெட் கோமிங்கோ பினானி ஜிங்க் லிமிடெட் |
| **ஜார்ஜ் குருவில்லா** FCA நிர்வாக இயக்குநர் | | நிதித்துறை ஆலோசகர் |

**Forms Available at :**

**Alpha Financial**, 669, Mount Rd., Thousand Lights, Madras – 6 • **Arkay Investment**, 23 Rameswaram Rd., T.Nagar, Madras – 17 • **H.L Financial**, 12, North Crescent Rd., T.Nagar, Madras – 17 • **Integrated Enterprises**, 42, Motilal St., T.Nagar, Madras – 17 • **J.M. Financial**, 682, Mount Rd., Thousand Lights, Madras – 6 • **Universal Finance**, 157, I Floor, Linghi Chetty St., Madras – 1.

MRF, Malayala Manorama, OEN ஆகிய



# மரங்களை
# பாக்கெட்டை

'**வீ**ட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்' என்று அரசு தரப்பில் வாய் கிழியச் செய்யப் படும் பிரசாரம், பொது மக்களிடம் எந்த வொரு பாதிப்பையும் ஏற்படுத்தியிருப்ப தாகத் தெரியவில்லை. அப்படியே வளர்த்தா லும் அது கிளியை வளர்த்துப் பூனையிடம் கொடுத்த கதையாகத்தான் முடியும். இதற்கு ஏராளமான உதாரணங்களைச் சொல்ல முடி யும் என்றாலும் இப்போதைக்குக் காமராஜர் மாவட்டத்தை மட்டும் எடுத்துக் கொண்டு பார்ப்போம்.

விருதுநகரிலிருந்து அருப்புக் கோட்டை செல்லும் சுமார் பத்தொன்பது கி. மீ. தூரச் சாலையின் இரண்டு பக்கங்களிலும் ஏராள மான புளிய மரங்கள். அத்தனையும் இரண்டு பேர் சேர்ந்து கட்டிப் பிடித்தாலும் பிடிக்க முடியாத அளவுக்கு வளர்ந்த மரங்கள். அப் படியானால் அந்த மரங்கள் கொப்பும் கிளையு மாகக் கிளைத்து, எப்படியொரு ரம்மியமான காட்சியைத் தர வேண்டும்! ஆனால் நிலை மையே தலைகீழாக இருக்கிறது; அத்தனையும் மொட்டை மொட்டையாகத்தான் நிற்கின் றன! 'நிழல் தரும் மரங்களை வெட்டாதீர் கள்' என்று தமிழக அரசின் வனத்துறை போர்டுக்குப் பக்கத்திலுள்ள மரங்கள் கூட மொட்டையடிக்கப்பட்ட அநியாயம்தான்.

ஒருவேளை, அவை நிஜமாகவே பட்டுப் போய் விட்டதால்தான் அப்படியிருக்கின் றனவோ? அருகில் போய்ப் பார்த்தோம். அந்த மரங்களின் ஒவ்வொரு கிளையும் ரம்பம் கொண்டு அறுக்கப்பட்டிருந்தன. அறுக்கப்பட்ட கிளைகளிலெல்லாம் சுமார் இரண்டடி உயரத்திற்குக் கொத்துக் கொத் தாகத் துளிர்த்திருக்கும் தளிர்கள்! யார் இப்படி அறுத்தது? 'எல்லாம் நமது பலம் மிக்க அரசியல்வாதிகளின் ஆசிபெற்றவர் கள்தான். இதற்கு நமது நெடுஞ்சாலைத் துறை யினரும் உடந்தை!' என்றார்கள், எப்படி?



இவைதான் பட்ட மரங்களாம்!

நல்ல மரங்களை வெட்டுவதற்கு 'ரூல்ஸ்' இடம் கொடுக்காது என்பதால், முதலில், அதன் கிளைகளையெல்லாம் ரம்பத்தைக் கொண்டு அறுத்துவிடுவது. மறுபடி மறுபடி அவை துளிர்த்தாலும் அவற்றையும் வெட்டித் தள்ளிக் கொண்டே இருப்பது. இந்தச் சித்திரவதைகளைத் தாங்காமல், கடைசியில் ஒருநாள் அந்த மரங்களே மண் டையைப் போட்டுவிடும். பிறகென்ன? பட்டமரம் என்று கணக்கெழுதிக் கடைசியில் அதைச் சட்டபூர்வமாகவே திருடிவிடுவது. இதுதான் அங்கே நடந்து கொண்டிருக்கிறது.

இதுபற்றி நெடுஞ்சாலைத் துறையினரிடம் கேட்ட போது, 'கிடையவே கிடையாது. அவை அத்தனையும் தாமாகவே பட்டுப் போன மரங்கள்தான். பட்டுப் போன மரங் களைத்தான் ஏலத்தில் விடுகிறோம்! அப்படி ஏலம் எடுத்தவர்கள் வெட்டிக் கொண்டு போவதைத்தான் நீங்கள் பார்த்துவிட்டு வந்திருக்கிறீர்கள்!' என்றார்கள். 'தாமாகவே பட்டுப் போன மரங்கள் எப்படித் துளிர்க் கும்?' என்று திருப்பிக் கேட்டபோது, 'ஒரு மரமும் அப்படித் துளிர்த்திருக்கவில்லையே!' என்று ஒரே போடாகப் போட்டார்கள். இதே கதிதான் அருப்புக்கோட்டையிலிருந்து திருச்சுழி செல்லும் சாலையோரத்திலுள்ள மரங்களுக்கும்.



# ட்டுவோம்; நிரப்புவோம்!

போக்குவரத்து நெரிசல் மிகுந்த சாலையோர மரங்களுக்கே இந்தக் கதிதான் என்றால், ஜன நடமாட்டமே இல்லாத வனப் பகுதியிலிருக்கும் மரங்களின் கதி பற்றிச் சொல்லவே தேவையில்லை. காமராஜர் மாவட்டத்திலிருக்கும் மேற்குத் தொடர்ச்சி மலைக் காடுகளிலிருந்து மட்டும், தலைச் சுமைகளாகவும், சைக்கிள் சுமைகளாகவும் இரவு நேரங்களில் கொண்டு வரப்படும் லாரிச் சுமைகளாகவும் தினசரி சுமார் அறுநூறு டன் எடையுள்ள மரங்கள் திருடப்படுகின்றன என்கிறார்கள். இதில் விலையுயர்ந்த சந்தன மரங்களிலிருந்து எல்லாமே அடக்கம்!

இதுபற்றிச் சென்ற மாதம் விருதுநகரில் நடந்த காமராஜர் மாவட்ட வளர்ச்சி மன்றக் கூட்டத்தில், ஆளுங்கட்சி எம். எல். ஏ. வான தாமரைக்கனியே புகார் கூறியிருக்கிறார். ராஜபாளையம் முனிசிபல் சேர்மன் சுப்பா ராஜ், 'நீங்கள் யாரிடமும் சொல்லாமல் ஒருநாள் மாறு வேடத்தில் என்னோடு வந்தால், லாரி லாரியாக மரங்கள் கடத்தப்படுவதை நானே உங்களுக்கு நேரில் காட்டுகிறேன்!' என்று அதே கூட்டத்தில் மாவட்டக் கலெக்டரிடம் சொல்லியிருக்கிறார். அந்த அளவுக்கு வெளிப்படையாகவே மரங்கள் கடத்தப்படுகின்றன. தலைச் சுமைகளாகவும், சைக்கிள் சுமைகளாகவும் கடத்தப்படுவதை நாங்களும் பல இடங்களில் நேரில் பார்த்தோம்.

இப்படி தினந்தோறும் காடுகள் அழிக்கப்பட்டுக் கொண்டே இருப்பதால் சுற்றுப்புறச் சூழல் பாதிக்கப்பட்டு மழை வளம்தான் பாதிக்கப்படும் என்பதில்லை. அபூர்வமான வனவிலங்குகளின் எண்ணிக்கையும் அருகிக் கொண்டே வருகிறது; மரங்களோடு சேர்ந்து அவையும் அழிந்து கொண்டே வருகின்றன.

இந்த அக்கிரமங்களுக்கெல்லாம் அதிகாரிகளின் 'மாமூல்' புத்தி மட்டும்தான் காரணமா என்றால் நிச்சயமாக இல்லை. சமூக விரோத சக்திகளும், ரவுடிகளும் இன்றைய அரசியலில் புகுந்து விட்டதுதான் மிக முக்கியமான காரணம். அதனால்தான் சில நேர்மையான அதிகாரிகள் கூட அவர்களின் ரவுடித் தனத்திற்கு ஈடுகொடுக்கப் பயந்து 'கிடைத்த வரை லாபம்!' என்ற மனோபாவத்திற்கு மாறி விடுகிறார்கள். சில சமயங்களில் அந்தச் சமூக விரோத சக்திகள், சட்டத்தின் இடுக்குகளின் வழியாகத் தப்புவதற்குக் கூட



° லாரிக்காகக் காத்திருக்கின்றன.

அந்த அதிகாரிகளே வழிகாட்டவும் செய்கிறார்கள்.

அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி போன்ற மேலை நாடுகளிலெல்லாம் ஒரு பெரிய மரத்தை வெட்ட வேண்டுமென்றால், அதே இனத்தைச் சேர்ந்த இரண்டு மரக் கன்றுகளை நட்டு, அவை ஓரளவுக்கு வளர்ந்த பிறகுதான் அந்தப் பெரிய மரத்தை வெட்ட வேண்டும்; வெட்ட முடியும். அந்த அளவுக்குத் தீவிரமாக அரசும் மக்களும் காடுகளைப் பாதுகாக்கிறார்கள். அங்கே யாரும் மக்களை ஏமாற்றி விட முடியாது. அதேபோல் நாமும் விழிப்புணர்ச்சி கொள்ள வேண்டும். எதிலிருந்து, தப்பித்துக் கொண்டு வந்துவிட்டாலும் மக்கள் மன்றத்திலிருந்து தப்பிக்க முடியாது என்ற பயத்தை, அதிகார வர்க்கத்தினருக்கும், ஆட்சியிலிருப்பவர்களுக்கும் ஏற்படுத்தியாக வேண்டும். இல்லையெனில் எதிர்காலத்தில் நாம் இருக்கிற கோவணத்தையும் இழந்து விட்டுத்தான் நிற்க வேண்டியிருக்கும்.

— இளங்கோவன்

வாசகர் பட்டிமன்றம் — 6

# கம்ப்யூட்டர் இந்தியாவை என்ன செய்யும்?

**கம்ப்யூட்டர் இந்தியாவுக்கு நன்மையே செய்யும்!**
**முதல் பரிசு வாதம்**

1. நம் நாடு ஏராளமான வளங்களைப் பெற்று இருப்பினும் முன்னேற்றத்துக்குத் தடையாக இருப்பது கால தாமதம், சோம்பல் போன்றவையே. இந்தக் கால தாமதத்தினை அறவே நீக்கித் துரிதமாகப் பணிகளை நிறைவேற்ற கம்ப்யூட்டர்களின் தேவை மிக அவசியமாகிறது.

2. இந்தியாவின் அரசியல், சமூக அமைப்புக்களினால் தற்போது அனைத்துத் துறைகளிலும் லஞ்ச ஊழல், அதிகார துஷ்பிரயோகம் ஆகியன பெருகி, திறமைக்கும் அறிவுக்கும் மதிப்பு குறைந்து விட்டது. அனைத்துத் துறைகளிலும் திறமையின்மை இடம் பெற்று வருகிறது. இந்நிலையில் கம்ப்யூட்டர்கள் மூலம் அறிவுத்திறமை உள்ளவர்கள் மட்டுமே சிபாரிசுகள் இன்றித் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். லஞ்ச ஊழல், அதிகார துஷ்பிரயோகம் குறையும். பணிகள் மேலும் சிறப்பாக நடக்க வாய்ப்புண்டு.

3. கம்ப்யூட்டர் நுழைவின் மூலம் கால தாமதம் மட்டுமின்றிப் பொருள் விரயமும் தவிர்க்கப் படுகிறது.

4. கம்ப்யூட்டர் நுழைவினால் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும் என்பது உண்மைக்கு மாறானது. உண்மையில் வேலை வாய்ப்புகள் பெருகவே செய்யும்.

(அ) கம்ப்யூட்டர் பயன்படுத்தினாலும் அதற்கான புரோகிராமிங், மெயின்டனன்ஸ், ஆபரேஷன் போன்ற பணிகளுக்கு வேலை வாய்ப்பு ஏற்படும்.

(ஆ) கம்ப்யூட்டர் பயன்படுத்துவதினால் தொழிலகங்கள் அதிக லாபம் அடையும். இதனால் நலிவடைந்த தொழிலகங்களும் சீர் படும். புதிய தொழில்கள் தொடங்கப் பெற்று வேலை வாய்ப்புக்களும் அதிகரிக்கும். நமது நாட்டில் பயன்படுத்தப்படாது உள்ள ஏராள இயற்கை வளங்கள் உரிய முறையில் பயனுக்கப்படும்.

(இ) கம்ப்யூட்டர் தேவை அதிகரிப்பதனால் கம்ப்யூட்டர், மற்றும் அதன் உதிரி பாகங்கள் தயாரிக்கும் தொழில்கள் தொடங்கப்படும். இங்கும் நமது நாட்டு மக்களுக்கு வேலைவாய்ப்புக்கள் பெருகும்.

(ஈ) சிறிய மூலதனத்தைக் கொண்டும் புதிய தொழில்கள் தொடங்க ஆர்வம் அதிகரிக்கும். இதனால் தொழில் வளர்ச்சி பெருகும். வேலையில்லாத் திண்டாட்டமும் குறையும்.

— எம். ஏ. பாஸ்கரன், நாமக்கல்.

இந்திய ரயில்வே டீசல் மயமாக்கப்பட்டபோது தொழிலாளர்களின் எண்ணிக்கை கணிசமாய்க் குறையும் என்று அஞ்சி, 'டீசல் எஞ்சினைப் புகுத்தாதே' என்று தண்டவாளத்தின் குறுக்கே படுக்கவும் தொழிலாளர் வர்க்கம் முன் நின்றது. டிராக்டர் கொண்டு உழவு தொடங்கிய காலத்தில் 'ஏர்' உழவனை வயிற்றிலடிக்காதே'' என்று குரல் கொடுத்த கதையெல்லாம் நமக்குத் தெரிந்ததுதான். விஞ்ஞானம் வளர்ந்து வருகின்ற ஒன்று. அதனை எதிர்த்து நிற்கின்ற விழைவு, நல்ல பலனைத் தர முடியாது. அதனை மனிதகுல வளர்ச்சிக்கு எங்ஙனம் பயன்படுத்த வேண்டும் என்பதில்தான் •போட்டி இருக்க முடியும், இருக்க வேண்டும்.

— எஸ். ராமச்சந்திரன், விருத்தாசலம்.

உபரியாக உள்ள மனித சக்தியைக் கொண்டு, அணை கட்டுதல், சாலை விஸ்தரித்தல், வீடுகள் கட்டுதல், தொழில்கள் விரிவு படுத்துதல் போன்ற பல்வேறு ஆக்கப்பணிகளை நடத்திக் கொண்டு போகலாம். நாட்டில் பல துறைகளிலும் வளமையும் முன்னேற்றமும் ஏற்படும். அதே நேரத்தில் பாங்குகள், ரயில்வே, விமானத்துறை போன்ற மக்கள் சேவை நிலையங்களில் கம்ப்யூட்டர்களைப் பரவலாக உபயோகப்படுத்தினால் மக்களுக்கு அவைகளின் சேவைகள் பிரமிக்கத் தக்க வகையில் விஸ்தரிக்கவும் சேவையின் தரம் உயரவும் வாய்ப்பு உண்டு.

— ஆர். ராமமூர்த்தி, செகந்திராபாத்.

70 கோடி மக்களில் பெரும்பாலோர் படிப்பறிவில்லாதவர்களாக இருக்கின்ற காரணத்தால் இந்தியாவுக்கு கம்ப்யூட்டர் தேவை இல்லை என்பது சரியான வாதமல்ல. விவேகானந்தர் என்ன சொன்னார்? எனக்கு

வலிமையும் மன உறுதியும் உள்ள சில இளைஞர்களைத் தாருங்கள். நான், புதிய, வலிமை உள்ள இந்தியாவை உருவாக்கிக் காட்டுகிறேன் என்றார். அதேபோல் இங்கு உள்ள மிகச் சில அறிவாளிகள் நினைத்தால் மற்ற தற்குறிகளை மாற்றி விடலாம். இந்தியா துரிதமாக முன்னேற வேண்டும் என்றால் கம்ப்யூட்டர் கட்டாயம் தேவை. அதன் உதவியோடுதான் இந்நாட்டில் அறியாமையையும் ஏழ்மையையும் மிகத் துரிதமாக ஒழிக்க முடியும்.

ஆர். விஜயா சாமுண்டீஸ்வரி, காருகுறிச்சி.

கம்ப்யூட்டர் லஞ்சம் வாங்காது. அரசுப் பணத்தை வீண் விரயம் செய்யாது. அரட்டை அடித்துக் கொண்டு தூங்கியே நாற்காலியைத் தேய்த்து, ஃபேன் காற்று வாங்கி, உடம்பு அலுங்காமல் பொழுதை ஓட்டிவிட்டுச் சம்பளம் போதாது, பஞ்சப்படி உயர்த்த வேண்டும் என்று போராட்டம் நடத்தாது; வேண்டியவர்களுக்குச் சட்டத்தின் ஓட்டை உடைசலைப் பயன்படுத்திச் சலுகைகள் செய்யாது. பேரம் பேசாது; ஆபீஸ் உபயோகத்துக்கான சாமான்களை (கார் உட்பட) சொந்த உபயோகத்துக்குப் பயன்படுத்தாது. நாட்டு நலனையோ மக்களின் சிரமத்தையோ பொருட்படுத்தாமல் ஸ்ட்ரைக், போராட்டம் என்று ஓட்டி அடிக்காது. நாடிச் செல்வோருக்கும், அரசுக்கும் நாட்டுக்கும் முழுப் பயன் கிடைக்கும்.

— தஞ்சாவூர்,
இராம ஜோதிவேல்.

முன்னேற்றத்துக்கு வேகம் தேவை என்பதை உணர்ந்துதான் அன்றைய பிரதமர் நேருஜி இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழிற்சாலைகளை இயந்திர மயமாக்கு தலை ஊக்குவித்தார். அப்போதும் அவருக்கு எதிர்ப்பு இருந்தது. அதையும் மீறி அவர் செயல்பட்டதால்தான் நாம் பல நன்மைகளை இன்று அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். அவர் வழி செல்லும் அவருடைய பேரன் கம்ப்யூட்டரைக் கொண்டு வரட்டும். அதனால் நன்மையே விளையும். எதுவும் எதனாலும் அழிந்துவிடாது. ஸ்கூட்டர்களும், மோட்டார் சைக்கிள்களும் பெருகி விட்டதால், நாட்டில் சைக்கிள் தொழிற்சாலைகளையெல்லாம் மூடி, தொழிலாளர்களை வீட்டுக்கா அனுப்பி விட்டார்கள்?

— பி. ஆர். ஸ்ரீநிவாஸன், வேலூர்.

**கம்ப்யூட்டர் இந்தியாவுக்கு தீமையே விளைவிக்கும் முதல் பரிசு வாதம்**

உண்ண உணவு, படுக்கப் பாய், உடுக்க உடை, இந்த மூன்றுமே இல்லாத ஒருவனுக்கு, பார்ப்பதற்கு வீடியோ டெக் கிடைத்ததாம்! அந்தக் கதைதான் இந்தியாவுக்குள் கம்ப்யூட்டர் நுழைவது என்பது.

குப்பைத் தொட்டியிலே எறியப்படும் எச்சில் இலையை, மனிதனும், நாயும் சேர்ந்தே எடுத்துப் பங்கு போட்டுத் தின்னும் நிலை, இன்னமும் இந்த நாட்டில் மாறாத போது, கம்ப்யூட்டர்களா இவர்கள் பிரச்னைகளைத் தீர்த்து வைக்கப் போகின்றன? மேல் வர்க்கம், நடுத்தர வர்க்கம், கீழ் வர்க்கம் என்று மனிதன் தன்னை வர்க்க வாரியாகப்

**வாசகர் தீர்ப்பு!**

**கம்ப்யூட்டர் இந்தியாவுக்கு:**

| | |
|---|---|
| நன்மையே செய்யும்! | 53% |
| தீமையே விளைவிக்கும் | 47% |

பிரித்துக் கொண்டு, மேல்வர்க்கத்தார், மற்ற வர்க்கத்தாரைச் சுரண்டிச் சாப்பிட்டு, ஒட்டாண்டியாய் நிற்க வைக்கும் நிலை இன்னும் இந்த நாட்டில் மாறாத போது, கம்ப்யூட்டர் இவைகளை நேராக்கிவிடப் போகிறதா? இன்னும் சில ஆண்டுகளில் நூறு கோடியை எட்ட இருக்கும் இந்தியாவின் மக்கள் தொகை என்பது உலக அரங்கில் இந்திய அரசின் சாதனைகளில் ஒன்று. ஆண்டுக்குச் சுமார் 5 லட்சம் மாணவர்கள் பட்டதாரிகளாக வெளியே வந்து, ஏற்கெனவே வேலையில்லாமல் கஞ்சா பிடித்துக் கொண்டிருக்கும், கோடிக்கணக்கான மாணவர்களிடம் சேர்ந்து கொள்கிற நிலைமைக்கு, கம்ப்யூட்டர்கள் முற்றுப் புள்ளி வைக்க முடியுமா என்ன? கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு வெளியே வரும் 100 சதவிகித இளைஞர்களில், சுமார் 5% இளைஞனுக்குக் கூட வேலை வாய்ப்பு உறுதியை மத்திய அரசு கொடுக்க முடியாத போது, கம்ப்யூட்டர்களால்தான் இந்தியா பிரகாசமடையப் போகிறது என்று நமது பிரதமர் கருதுவாரேயானால், எங்கள் இளைஞர்கள் கையிலே பிச்சைப் பாத்திரத்தைக் கொடுத்துவிட்டு, அலுவலகங்களில் கம்ப்யூட்டர்களை வைக்கட்டும்.

கம்ப்யூட்டர்களின் ஆதிக்கம் வேறு பல நாடுகளில் உள்ளதை இவர்கள் உதாரணம் சுட்டலாம். ஆனால், இந்தியாவின் பரப்பளவைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு சிறியதான, ஜப்பான் நாட்டின் வளர்ச்சியில் 10 சதவிகிதத்தைக் கூட இந்தியா பெறவில்லை, என்பது எத்தனை பெரிய கேவலம். ஜப்பான் நாட்டின் இன்றைய முன்னேற்றம் கம்ப்யூட்டர்களால் என்று உங்களால் சொல்ல முடியுமா? ஏனென்றால், ஜப்பானின் கடைசிக் கண்டுபிடிப்புதான் கம்ப்யூட்டர்கள். உடல் உழைப்பு, வர்க்க வேற்றுமை இல்லாமை, மத, இன, மொழி வேற்றுமை இல்லாமை, தேசப் பற்று இவற்றின் காரணமாக முன்னேறிய ஜப்பானை ஒரு சதவிகிதம் கூடத் தனக்கு முன் உதாரணமாகக் காட்டிக் கொள்ள முடி

யாதது இந்திய அரசுக்கு எத்துணை பெரிய இழுக்கு? தோளத்துக்குள்ளே காண்சர் வியாதியை வைத்துக் கொண்டு, வெளியே கம்ப்யூட்டர் முன்னேற்றம் என்ற அலங்கார வளைவுகள் இந்த நாட்டிற்குச் சர்வ நிச்சயமாய் முன்னேற்றம் கொடுக்காது.

— மணக்கால் ஸ்ரீராம், சென்னை — 88.

கம்ப்யூட்டரைப் புகுத்துவதால் மட்டும் பிரதமர் எதிர்பார்க்கும் பயன்கள் ஏற்பட்டு விடப் போவதில்லை. தொழில் வளர்ச்சிக்கு முட்டுக் கட்டைகளை நீக்குதல் அவசியம். மேலும் ஜாதி மத அடிப்படையில் சலுகைகளை நீக்கி அனைத்து சமூகத்திற்கும், பொதுவான சட்டங்களை இயற்ற வேண்டும். குடும்ப நலத் திட்டத்தைச் சீனாவைப் போன்று கட்டாயமாக்க வேண்டும். பல மொழி பேசும் மக்கள் இந்தியப் பிரஜைகளே என்பதை மனத்தில் கொண்டு மொழி ஆதிக்க உணர்வைக் கைவிட வேண்டும். தாலுகா ரீதியாக அங்கங்கு கிடைக்கும் மூலப் பொருட்களின் அடிப்படையில் சிறிய பெரிய தொழிற்சாலைகளையும், அதன் தொடர்பான துணைத் தொழில்களையும் தொடங்க ஊக்கமளிக்க வேண்டும். இத்தகைய முற்போக்கான நடவடிக்கைகளினால்தான் வளமான இந்தியாவையும், ஒன்றுபட்ட பாரதத்தையும் பிரதமர் உருவாக்க முடியும்.

— எஸ். மணிமேகலை சேதுராமன், கமுதி.

இந்தியராகிய நாம் கம்ப்யூட்டரை நம்புவது புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொள்வது போல் ஆகும். அறிவியல், பொருளாதாரத் துறைகளில் முன்னேற்றம் கண்ட பின்னரே கம்ப்யூட்டர் மேலைநாடுகளில் கண்டுபிடிக்கப்பட்டது. இந்தியாவில் உள்ள மக்கள் மூடப்பழக்க வழக்கங்களுடன் கூடிய தற்குறிகளாக உள்ளனர். இந்தியாவில் பெருமளவிலான சமுதாயபொருளாதாரமுன்னேற்றம்இல்லை. இந்நிலையில் இந்தியாவுக்கு கம்ப்யூட்டர் என்ன செய்யும்? கத்தி போன்றது கம்ப்யூட்டர். அது காயையும் வெட்டும்; கழுத்தையும் அறுக்கும்; அது பயன்படுத்துவோரைப் பொறுத்தது. இந்தியராகிய நாம் கம்ப்யூட்டரைப் பயன்படுத்திக் காயை வெட்டுகிறோமா, கழுத்தை அறுக்கிறோமா என்றால், நிச்சயமாக இரண்டாவதைத் தான்.

— உமா ஜெயராமன், சென்னை — 30.

வேலையில்லாத் திண்டாட்டம், மொழிப் பிரச்னை, மக்கள் தொகை பெருக்கம் ஆகியன. இவை அனைத்திற்கும் சுமுகமான தீர்வு காண வேண்டும். படித்து முடிக்கும் அனைவருக்கும் நிச்சயம் வேலை கிடைக்கும் என்ற நிலைமை ஏற்பட வேண்டும் என்றால் கம்ப்யூட்டர் என்ற வார்த்தையே இந்திய மொழி அகராதிகளில் இருக்கக் கூடாது. தேடும் கைகளுக்கு வேலை கிடைக்கவில்லையெனில் அவைகள் என்ன செய்யும்? கலவரம், குழப்பம் இவைகளை அல்லவா ஏற்படுத்தும்? எனவே நம் நாட்டிற்கு ஏற்பட்டுள்ள இராஜ பிளவை நோய்க்குத் தேவை சரியான வைத்தியம்தான். அதை விடுத்து அந்த இடத்தில் பட்டாடை போர்த்தி விட்டால் ரணம் ஆறிவிடுமா? ஆரோக்கியமான சமுதாய வளர்ச்சி ஏற்பட்ட பிறகே கம்ப்யூட்டர் வேரூன்றப்பட வேண்டும். இப்போதே அவசரப்பட்டால் அரச மரத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு அடி வயிற்றைத் தொட்டுப் பார்த்த கதைதான்.

— ஞானகீர்த்தி, திருவண்ணாமலை.

ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம் தொடர்பான புள்ளி விவரப்படி சுமார் 200 இலட்சம் பேர் நம் நாட்டில் வேலையற்றோர். எனவே மேலும் வேலை வாய்ப்பைப் பறிக்கும் கம்ப்யூட்டரைப் புகுத்தவே கூடாது. மேலும், கிராமப்புறங்களில் பள்ளிக்கூடங்களே இல்லை. இருந்தாலும், ஆசிரியர்கள் இல்லை. கரும் பலகையே பார்த்தறியாத பல்லாயிரக் கணக்கான குழந்தைகள் உள்ள இந்நாட்டில் கம்ப்யூட்டர் வருவது பெரிய முட்டாள்தனம். பார்த்துப் படிக்க விளக்கு இல்லாத நாட்டில் இன்ஸாட், வீடியோ, டெலிவிஷன் மூலம் கல்வி போதிப்பதும் அதற்காகச் செலவழிப்பதும் கொடூரம்.

— வை. மு. தாசன், மதுரை — 1.

'கம்ப்யூட்டர்களால் வேலை வாய்ப்பு குறையாது' என்று கூறப்படுவது பெரிய டூப்! **IBM** என்ற உலகப் புகழ்பெற்ற கம்ப்யூட்டர் நிறுவனத் தலைவரே 'உழைப்பாளர் எண்ணிக்கையைக் குறைப்பதுதான் கம்ப்யூட்டர்களின் முக்கிய நோக்கம்' என்று கூறியுள்ளார்! நம் நாட்டில் ஏற்கெனவே 2.5 கோடி மக்கள் வேலையில்லாமல் இருக்கும் நேரத்தில் (வேலை பதிவுத் துறை கணக்கின்படி — அதில் பதிவு செய்யாதவர்கள் எத்தனை பேரோ!) கம்ப்யூட்டர் வந்தால் அதனால் அவர்களுக்கு எவ்வளவு பாதிப்பு ஏற்படும் என்று யோசித்துப் பார்க்க வேண்டும். கம்ப்யூட்டர் வந்ததால் அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் ரயில்வே தொழிலாளிகளுக்கு எவ்வளவு பாதிப்பு ஏற்பட்டது என்பதைக் கீழே இருக்கும் புள்ளி விவரம் உணர்த்தும்.

அமெரிக்கா — தொழிலாளர்களின் எண்ணிக்கை — *1960 — 1980: 7,80,000; 5,00,000* குறைந்தவர்களின் எண்ணிக்கை: *2,80,000* குறைந்தவர்களின் எண்ணிக்கை சதவிகிதம்: *36%*

பிரிட்டன் — தொழிலாளர்களின் எண்ணிக்கை: *5,14,500; 1,77,914* குறைந்தவர்களின் எண்ணிக்கை: *3,36,586* குறைந்தவர்களின் எண்ணிக்கை சதவிகிதம்: *65%* (ஆதாரம்: என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிகா, அமெரிக்கானா).

— வெ. சே. வெங்கட்டராமன், சென்னை.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு அடுத்த இதழில் இடம் பெறும்.




# பிலிப்ஸ்

## சென்ற ஆண்டு பிலிப்ஸ் வழங்கிய "முற்றிலும் புதியதை" விட வேறு சிறந்தது உண்டா?



இந்த ஆண்டின்
மிக நவீனமானதை
வழங்குவதும் பிலிப்ஸ்

5 பெரிய ஸ்டீரியோ டூ-இன்-ஒன்கள்



D 8248 ரூ. 3150/-*



AR 538 ரூ. 2200/-*



AR 458 ரூ. 1950/-*



DR 568 ரூ. 2600/*



AR 448 ரூ. 1800/-*

* எக்சைஸ் வரி உள்ளிட்டது. தல வரிகள் தனி. இந்த விலைகள் மாற்றத்திற்கு உட்பட்டவை. லைசென்ஸ் தேவை இல்லை.

CLARION/B/P/200/203 TAM

**பிலிப்ஸ் - ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**

# மாண்புமிகு முதலமைச்சர்

**சருக்கம் 28**

**தில்லைத் திருநகர்**

அறையினுள் சேக்கிழார் என்கிற தமிழ் ஜோதி பிரவேசிக்கிற போது...

நலிவுற்ற உடல் என்றும் பாராத நாட்டிய ஜோதி, ''சுவாமி!'' என்று பதறியவாறு தட்டுத் தடுமாறி எழுந்து வந்து கால்களில் விழுந்தாள். கண்ணீர் மடை திறக்கக் கதறுகிறாள்.

''நான் என்ன குற்றம் செய்தேன் சுவாமி? என்ன குற்றம் செய்தேன்? சொல்லுங்கள்? இன்றளவும் இந்த ஜோதியில் சேக்கிழார் பிரகாசத்தைத் தவிர வேறு எந்தப் பிரகாசத்தையும் சேர்த்தறியேனே...! நான் செய்த குற்றம்தான் என்ன?''

ஜோதி கேவியழும் ஓசை வெளிவாசலையும் எட்டி விடுகிறது.

குலோத்துங்கன் கண்கள் குளமாகிப் போயின. அவன் உத்தரீயத்தால் துடைத்துக் கொள்வதை வல்லரசி கவனிக்க அவளது கண்களும் கலங்கிப் போயின.

''சொல்லுங்கள் சுவாமி?''

எத்தனை முறைதான் சொல்லுங்கள், சொல்லுங்கள் என்று கதறுவாள்; பதறுவாள் கவிதைக்கெல்லாம் கவிதை போன்ற கனிமிக்க பேரழகி ஜோதி?

''எழுந்திரு ஜோதி! முதலில் அமைதிப்படுத்திக் கொள்; பிறகு பேசுவோம்!''

''நான் அமைதி இழந்து எத்தனையோ நாட்களாய் விட்டன. இப்போது நீங்கள் காண்பது ஜோதியல்ல; மரணத்தின் மீதி! இந்த மரணத்திலாவது நான் செய்த குற்றமென்ன என்பதை நிருபணம் செய்யுங்கள்? எந்த நோக்கில் அன்று மாளிகைக்கு வந்த போது ஓலைநாயகத்தை விட்டு விரட்டினீர்கள்?''

''குலோத்துங்க சோழரை நீ காதலித்தது குற்றம் என்று சொல்ல மாட்டேன்; ஆனால் பட்டத்தரசிக்கு நீ செய்தது பாவம் என்பதை புணர்த்தவே அவ்வாறு விரட்ட நேர்ந்தது!''

''இதனைச் சோழ மாமன்னர் இன்னுமா விளக்காமல் இருக்கிறார்?''

''எதனை ஜோதி?''

''ஐயோ! அவர் ஆடிய நாடகத்துக்காக அவரே நாணப்படுகிறாரா? இதெல்லாம் வெறும் நாடகம், சுவாமி! வெறும் நாடகம்! நான் காதலித்தது உண்மை; சோழ மாமன்னரையல்ல!

''பின், கபாலீச்சுரனையா?''

''இல்லை, இல்லை... நான்... மானசிகமாகக் காதலித்தது உங்களை, உங்களை... இப்போதும்... இப்போதும்...''

ஜோதி தலையைத் திருப்பிக் கொண்டு 'கோ'வென்று கதறிவிட்டாள்.

சேக்கிழாரோ, புதுச் செய்தி கேட்டுச் சிலையாய் நிலைத்துப் போனார்.

''ஜோதி! இது என்ன புதுச் செய்தி?''

''புதுச் செய்தியல்ல பிரபோ! புழுங்கிப் புழுங்கி மனத்துள்ளே மறைத்து வைத்த புதையல் செய்தி! எந்த ரேவதி நட்சத்திரத்தில் உங்களைக் கண்டேனோ அன்றே மானசிகவதியாய் விட்ட மர்மச் செய்தி! சுவாமி! அடிக்கடி நீங்கள் சொல்வீர்கள்; 'ஜோதி! எனது வாழ்வின் முன்னேற்றத்துக்கு ஜோதியாக இரு! நீதியாக இரு! ஆனால் பீதியாக இராதே! மீதியாக இராதே!' என்னை மீறவும் விடாதே! மாறாக உனது அழகும் ஆடற்கலையும் என்னைப் புடம் போட்டுத் தங்கமாக்க வேண்டும்' என்று! நான் என்னுள் புடம் போட்டு வந்தேன்! அப்போதுதான் முணுமுணுப்புக்கள் பல உதடுகளில் மோகச் சித்திரம் வரைந்து பார்க்கத் தொடங்கின.''

''முணுமுணுப்புக்களா?''

''ஆமாம் சுவாமி! உங்களுக்கும் இந்த முணுமுணுப்பு எட்டக்கூடாது; முணுமுணுப்புக்கும் வாயடைக்க வேண்டும்! என்ன செய்வது? அப்போதுதான் சோழ மாமன்னர் கபாலீச்சுரக் கோலம் புனைந்து, என்னைக் காதலியாக நடிக்கச் செய்து புயலையடக்கினார்! இல்லையென்றால் அது ஒட்டக்கூத்தர் மூலமாகப் பயங்கரமாக எழுந்து உங்களையே விழுங்கி இருக்கும்!''

பூகம்பமாய் அதிர்ந்து போனார் புலவரேறு — அரசியல் புரட்சி மேதை சேக்கிழார்.

''இவ்வளவுமா நடந்திருக்கிறது?''

''இதற்கு மேலும் நடந்திருக்கிறது! தங்கள் பேரில் மாசு மறுவோ, தூசு தும்போ ஒட்டக் கூடாது என்பது குறித்து மிகப் பெரும் சிரமம் எடுத்துக் கொண்டவர் அநபாயச் சோழ மாமன்னர். தமக்கு அவமானம் வந்தாலும் பரவாயில்லை என்று எண்ணினார். ஆனால் தங்களுக்கு ஏற்பட்டு விட்டால்? தாங்களோ என்னிடம், களங்கமின்றி ஏகாக்கிருதரைப் போலப் பழகுகிறீர்கள்; நானும் பழகுகிறேன். இந்தப் பழக்கமே திருத்தொண்டர் புராண உதயம் என்றால் மறுக்க முடியாது. ஆனால் இந்தத் தெய்வீகப் பழக்கம் பார்ப்பவர் கண்ணைத் திசை திருப்பக் கூடாதே என்பதற்காகக் காதலனாக நடித்தார் சோழ மாமன்னர். திசையைத் திருப்பினார். ஆனால் அவரால் குடும்பத்தில் ஏற்பட்ட குழப்பத்தைத் திசை

திருப்ப முடியவில்லை. இப்போது திணறு கிறார்!''

சேக்கிழார் கண்களில் சிவதீர்த்தம் கொட்டுகிறது. எழுந்து கொள்கிறார். சல னங்கள் மானுடத்தை விட்டு வைப்பதில்லை. சலனங்களே இல்லையென்றால் உலகத்து இயக்கம் ஏது?

''சுவாமி, புறப்பட்டு விட்டீர்களா? நீங்கள்தாம் என்ன செய்ய முடியும்? பாதி யாய் விட்ட ஜோதிக்கு ஏது மருத்துவம் என்கி றீர்களா? அப்படியானால் நான் தேனூர் நோக்கிப் பயணமாக வேண்டியவளே!''

''ஜோதீ...!''

சேக்கிழார் தம்மை மறந்து இரைந்து விட் டார். ''திருத்தொண்டர் புராணம் திருத்த மாக நிறைவு பெற வேண்டாமா?''

ஜோதி ஒருகணம் யோசிக்கிறாள்.

''நானில்லாவிட்டாலும் அது நிறைவு பெறும் சுவாமி! நானில்லாத நாட்களில் ஞானசம்பந்தர் வரை பாடி முடிக்கவில் லையா?''

''இல்லை; அந்தத் தமிழ் ஞானப்பழத்தைத் தொட்டு இருக்கிறேன். தமிழ் வருகிறது; இனிமை வர மறுக்கிறது. ஜோதி! நீ என்னு டன் புறப்படுகிறாய்!''

''எங்கே சுவாமி? மருத்துவர் இல்லத் துக்கா?''

''மருத்துவர்கள் தர முடியாத மருந்து ஒன் றுண்டு.''

''எது சுவாமி?''

''இன்று ரேவதி! அது தெரியுமல்லவா?''

''எதையெதையோ மறந்தாய் விட்டது! இதையா ஞாபகத்தில் வைத்திருக்கிறேன்! இன்று ரேவதியா-சுவாமி!''

''ஆமாம்; இதுவரை மன்னர் பழிசுமந் தார்; இனி நான் சுமப்பதானாலும் பாதக மில்லை! மன்னர் குடும்பத்தில் அமைதி நிலவ வேண்டும். எனது திருத்தொண்டர் புராணத்



துக்கும் ஓர் அமைதி ஏற்பட வேண்டும். அரங்கேற்றத்துக்குப் பிறகு வழி சொல்லுவேன்!''

''வழி சொல்வேன் என்றால்...? புரியவில்லை சுவாமி!''

''என்னையே உன்னிடம் ஒப்படைத்தாலும் ஒப்படைப்பேன்! அதுகுறித்து இப்போது எதையும் சொல்வதற்கில்லை. புறப்படு ஜோதி!''

''இதோ....''

பாதியாய்ப் போன ஜோதிப் பிரகாசத்தில் மேலும் மேலும் பிரகாசம் கூடத் தொடங்குகிறது.

''சோழ மாமன்னா!''

குரல் கேட்டு ஓடிவந்து நிற்கிறான் குலோத்துங்கன்.

''எனக்காக நீங்கள் சுமந்த பாரம், அபாரம்! இதற்கு நான் என்ன கைமாறு செய்வேன்?''

''திருத்தொண்டர் புராணம் புலவர் பெருமானே! அது போதும்!''

திருத்தொண்டர் புராணம் நிறைவு பெற்றுக் கொண்டிருந்தது. திருவாதிரையை எதிர்பார்த்தது.

அரங்கேற்றத்துக்காவது தியாகவல்லியும் முக்கோக்கிழானடி தேவியும் வருகை தருவார்களா?

பொழுது விடிந்தால் சித்திரை மாதத்துத் திருவாதிரை நட்சத்திரத் திருநாள்.

முன்னான் காலையில் அரச குடும்பங்கள் புறப்பட்டாக வேண்டும்.

அரங்கேற்றத்தின் போது பட்டத்தரசி பக்கத்திலில்லாமல் இருந்தால் பார்ப்பவர் என்ன நினைப்பர். முன்பே இதுகுறித்துப் பலர் பலவிதமாகப் பேசினர். இப்போதும் அப்படிப் பேசலாமா?

சேக்கிழாரே அழைக்க வேண்டி அந்தப்புரம் நாடிச் சென்றார்.

ஆனால் அவருக்கு இரட்டைத் தாழ்ப்பாள் போடவில்லை. இரட்டிப்பு மகிழ்ச்சியோடு வரவேற்கிறாள் பட்டத்தரசி தியாகவல்லி பக்கத்தே முக்கோக்கிழானடி தேவியும் இருந்தாள்.

''வரவேண்டும் அமைச்சர் பிரானே!''

''நான் முதலமைச்சனாக வரவில்லை சோழ மாதேவி! திருத்தொண்டர் புராண ஆசிரியன் என்ற முறையில் வந்திருக்கிறேன்! அரங்கேற்றத்துக்கு நீங்கள் அருகிலிருந்து ஆசி வழங்குகிறீர்கள்!''

''அந்த ஜோதி வருகிறாளா?''

''அந்த ஜோதியல்ல; என் ஜோதி என்னுடன் வருகிறாள்!''

''புலவர் பெருமானே!''

தியாகவல்லி திருதிருவென்று விழிக்கிறாள்.

சேக்கிழாரும் எந்தப் பொய்யுரையும் கூறாமல், நடந்த செய்தியை நடந்தவாறு சொல்லச் சொல்ல...

தியாகவல்லியும் முக்கோக்கிழானடியும் திணறிப் போகிறார்கள். ''இப்படியும் நடந்திருக்கிறதா?''

''நடந்திருக்கிறது தேவி! இது உண்மை! தில்லையம்பலவனறிய இதுஉண்மை!'' என்று கூறிக் கொண்டே சோழ சூரியனான குலோத்துங்கன் அறையினுள் பிரவேசிக்கிறான்.

''பிரபோ! என்னை மன்னியுங்கள்! எந்தப் பெண்ணுக்கும் கணவனிடம் ஏற்படுகிற சந்தேகம் எனக்கும் ஏற்பட்டு விட்டது. ஏற்படுமாறு சூழ்நிலை செய்துவிட்டது.''

காலில் விழுந்து வணங்குகிறாள், தொடர்ந்து முக்கோக்கிழானடியும் வணங்குகிறாள்.

அடுத்து இருநாழிகைப் போதில் சோழர் குடும்பம் தில்லைநகர் நோக்கிப் பயணப்பட்டுவிட்டது.

சோழ மக்கள் சொல்லொணாப் பெருமைக்கு ஆளாகி வழிகூட்டி வைக்கிறார்கள். எங்கும் மாமன்னரையும் கவிமன்னரையும் வாழ்த்திப் பெருங்குரல் எதிரொலிக்கிறது.

ஒரு சின்ன இழுக்கு இல்லாமல் எந்த ஒரு பெரிய செயலும் நிறைவடைவதில்லை என்பது போல அவைக் ...



## டாடி மட்டுமா? மம்மியும் தான்!

விருதுநகர் பஸ் நிலையம் அருகே ஒரு கண்கொள்ளாக் காட்சி.

டாடி மட்டும் குடித்து விட்டுப் புரள வேண்டுமா என்ன?

இதோ மூன்று குழந்தைகளின் மம்மி சோம பான மயக்கத்தில் இருக்கிறார். பசி மயக்கத்தில் இருந்த குழந்தைகளுக்குப் பரிதாபப்பட்டு ஒரு கான்ஸ்டபிள் இரண்டு ரூபாய் கொடுத்துக் குழந்தைகளை உண்ணச் சொல்ல அவர்களும் எதையோ வாங்கித் தின்று கொண்டிருந்த போது — க்ளிக்!




# நரசுஸ் காபியின் வைர விழா வெகுமதிகள்!







- **12 கிலோ** நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் பிளேட்.
- **10 கிலோ** நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டபரா செட்.
- **5 கிலோ** நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் 'ஆனந்த்' டம்ளர்.
- **1½ கிலோ** நரசுஸ் காபிக்கு துணிப்பை.
- **500 கிராம்** நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் ஸ்பூன்.

மொத்தமாகவோ, சில்லரையாகவோ, வாங்கும் நரசுஸ் காபியுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று, வெகுமதிகளைப் பெறுங்கள். 29.9.86 முதல் 31.10.86ல் முடியும் விற்பனைக்கே வெகுமதிகள் உரியவை.

ஜீவனுள்ள ஒரே காபி

# நரசுஸ் காபி



**நரசுஸ் காபி கம்பெனி**
சேலம் 636 007
கிளைகள்: தமிழகம் மற்றும் பாண்டிச்சேரியிலும்.

கூத்தர் வர மறுத்துவிட்டார். நேற்று வரை புறப்படுவதாக இருந்தவர் இன்று காலையில் மறுத்து விட்டார்.

காரணம்...

முன்பு தாம் அழைத்த போது இரட்டைத் தாழ்ப்பாளிட்ட பட்டத்தரசியார், இப்போது சேக்கிழார் அழைத்த உடன் புறப்பட்டது தான்.

உண்மையைத் தியாகவல்லியிடம் விரிவாக ஓவியம் தீட்டிக் காட்டலாம். அவள் குலோத்துங்கனின் உடலில் பாதி. ஆனால் அந்தச் சித்திரத்தை உலகு முழுவதுமறியவா காட்டி விட முடியும்? காட்டினால் சேக்கிழார் சரித்திரம் என்னாவது?

சேக்கிழார் எவ்வளவோ வேற்றுருவில் சமாதானம் செய்தும், ஒட்டக்கூத்தர் ஒப்புக் கொள்ள மறுத்து விட்டார்.

விட்டு விட்டனர். ஒட்டக்கூத்தர் வராததனால் அவரது மாணவர் தண்டியும் புறப்படவில்லை. ஏனைய புலவர்க் கூட்டம் புறப்பட்டுச் சென்றது.

தில்லைத் திருநகரே கோலாகலமாகக் காணப்படுகிறது. பொன் வேய்ந்த திருவிழா நாளைவிடப் பெருவிழாக் கோலம் பூண்டு திகழ்ந்தது.

அரங்கேற்றம் கோயிலுக்குள் அல்ல; சென்ற முறையே மக்கள் பார்க்க முடியாமல் தவித்துப் போன செய்தியறிந்ததால் இம்முறை வெளியில் பெரிய பந்தலிட்டு அரங்கும் அமைத்திருந்தனர்.

ஒரு நாளைக்கா? இரு நாளைக்கா?

ஒரு மண்டலத்துக்கு!

ஒவ்வொரு நாளும் ஒரு நாயனார் புராணத்தைச் சேக்கிழார் பகலில் படிக்க, படித்து முடித்ததும், இரவில் அந்தப் புராண வரிகளை இசையில் பாடி ஜோதி நடனத்தால் சிறப்பிக்க இருக்கிறாள்! சில நாயனார் பாடல்கள் கொஞ்சமானவையால், ஒருநாளைக்கு இரண்டு மூன்று நாயனார்களை அரங்கேற்றி விடலாம்!

ஜோதியின் நாட்டியத்தில் அன்று முதல் ஒரு புதிய பிரகாசம் மணக்கப் போகிறதல்லவா?

ஜோதியின் நெஞ்சிலோ உணர்ச்சிகள் நாட்டியமிடத் தொடங்கி விட்டன. அங்கே பல்வேறு கோணங்களில் போராட்டம்.

அன்று சேக்கிழார் சொன்ன சொற்கள்...

''என்னையே உன்னிடம் ஒப்படைத்தாலும் ஒப்படைப்பேன்...!''

எவ்வளவுக்கு ஆணித்தரமான சொற்கள்!

திருத்தொண்டர் புராணத்துக் காப்பியத் தலைவரான சுந்தரமூர்த்தி நாயனார் ஏற்கலாம்! அவர் காதல் நாயகன்!

ஆனால்...

திருத்தொண்டர் புராணத்து இரண்டு காண்டங்களும், பதின்மூன்று சருக்கங்களும், நான்காயிரத்து இருநூற்று எண்பத்து அறு பாடல்களும் ஏற்குமா? ஏற்கலாமா? ஏற்புடைத்துதானா?

(அடுத்த இதழில் நிறையும்)

## அருள் வாக்கு



சாஸ்திரம், ஸம்ப்ரதாயம் என்று சாதாரணமாகச் சொல்லும் போது வேறுவிதமான ஒரு பாகுபாடும் நினைக்கப்படுகிறது. அதாவது 'சாஸ்திரம் என்பது சட்ட புஸ்தகமாக எழுதி நிலையாக வைத்து விட்டது. ஸம்ப்ரதாயம் என்பது இப்படிச் சட்டமாக நாட்டப் படாவிட்டாலும் சாஸ்த்ரக்ஞர்கள் உள்பட ஸமூகத்தார் எல்லாராலும் பின்பற்றப்படுகிற விஷயங்கள்' என்று நினைக்கப்படுகிறது. சாஸ்திரம் என்பது **Scripture.** ஸம்ப்ரதாயம் என்பது **tradition, usage** — மரபு என்பது. சாஸ்திரமாக எழுதி வைத்தது எல்லாருக்கும் பொதுவாயிருக்கும். ஸம்ப்ரதாயமாகப் பழக்கத்தில் வந்தது ஒவ்வொரு பிராந்தியத்துக்கும் மாறலாம்; 'குலாசாரம்,' 'தேசாசாரம்' என்று குடும்பங்களுக்கிடையில், பல சீமைகளுக்கிடையில் மாறுதலாயிருக்கலாம்.

ஒரு வழியைச் சட்ட திட்டங்களால் காட்டிக் கொடுத்து அது ஜனங்களுக்கிடையில் நீண்ட காலம் வழங்கப்படும்போது வழக்கமாகிறது. ஜனங்கள் இதற்குப் பழகிப் போகிற போது 'பழக்க'மெனப்படுகிறது. பழக்க வழக்கங்கள் என்று பொதுவாக இருப்பவற்றை ஒரு **Individuul** (தனி நபர்) பற்றி ஒழுகும் போது — அதாவது அநுஷ்டிக்கும் போது — அது இவனுக்கு உண்டாக்குகிற சீலமே ஒழுக்கம் என்பது. சாஸ்த்ர ஸம்ப்ரதாயங்களின் ஆசார அநுஷ்டானங்களான பழக்க வழக்கங்களைப் பின்பற்றி ஒழுக்கமாக — **disciplined** ஆக — வாழ்கிறவனே ஆசார்யன். அவன் ஜெனரலாக எல்லாருக்கும் ஏற்பட்ட தர்ம நியதிகளோடு கூட ஒரு குறிப்பிட்ட ஸம்ப்ரதாயத்தின் சாஸ்திரங்களை அறிந்து அநுஷ்டித்துக் காட்டுபவனாக இருக்க வேண்டும். தன்னளவில் இப்படியிருக்கிறவனை மட்டும் ஆசார்யன் என்று சொல்லிவிட முடியாது. உங்களுக்கே தெரியுமே, ஆசார்யன் என்றால் உடனே சிஷ்யன் என்பவனும் இருந்தாக வேண்டும். அதாவது இவன் பிறத்தியாரையும் சிஷ்யனாக்கிக் கொண்டு அவனுக்கு இந்த தர்மாசாரங்களைப் போதனை பண்ணி, அதன்படியே அவன் நடக்கும்படி பண்ண வேண்டும். போதனை செய்ய வேண்டுமென்பதால் அவன் கற்றறிந்த வித்வானாக இருந்தாக வேண்டும்! அப்போதுதான் ஸந்தேகங்களைப் போக்கவும் எதிர் வாதத்தைக் கண்டனம் பண்ணவும் முடியும். இவனிடம் சிஷ்யனுக்கு நீண்ட காலம் பயிற்சி இருந்தால்தான் இவ்வளவும் கற்க முடியும்.

இந்தக் காலத்தில் ஆசார்யர்கள் என்பவர்களின் இடத்தில் ஆசிரியர்கள் (பள்ளிக்கூட மச்சர்களும் காலேஜ் புரொபஸர்களும்) இருக்கிறார்கள். ஆனால் இங்கே சொந்த வாழ்க்கையிலும் சரி, போதிப்பதிலும் சரி, தர்மங்களின் சம்பந்தமேயில்லாமலிருக்கிறது.

பழைய காலத்திலும் லௌகிக வித்யைகளையும் கலைகளையும் சொல்லித் தருகிற ஆசாரியர்கள் இருக்கத்தான் செய்தார்கள். க்ருபாசாரியார், த்ரோணாசார்யார் என்று தநுர்வேதம் — வெறும் ஆயுதப் பயிற்சி — சொல்லிக் கொடுத்தவர்களையும் அந்த நாளிலேயே 'ஆசார்யர்' என்று சொல்லியும் இருக்கிறார்கள். இவர்கள் எல்லாரும் கூட தர்மசாஸ்திர — ஸம்ப்ரதாயங்களை அறிந்தவர்களாகவும் சொந்த வாழ்க்கையி... ன்பற்றி, தங்களுடைய வித்வத், திறமை இவற்றுக்காக மட்டுமின்றி, நடத்தைக்காகவும் (ஆசாரத்துக்காகவும்) மதிப்புப் பெற்றவர்களாகவும் இருந்திருக்கிறார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# உறவு மாறு

'அன்புள்ள சுதா,

தொடர்ந்து வருகின்ற எனது கடிதங்கள் உனக்குத் தொல்லை கொடுக்குமோ என்பதை அறியேன். எதையும் சொன்னால்தானே புரிந்து கொள்ள முடியும்?

எத்தனையோ கடிதங்கள்...! எதற்குமே பதில் இல்லாத போது, 'மீண்டும் ஒரு கடிதம் தேவைதானா?' என்று என்னையே நான் கேட்டுக் கொள்கிறேன்.

பதில் எழுதாதது எதனால்? புரிந்து கொள்ள முயல்கிறேன். ஆனால் முடிய வில்லையே...?

சென்னையில் நாம் இருவரும் ஒரே அலு வலகத்தில் பணியாற்றிய இனிய நாட்களை எப்போதும் நினைத்துப் பார்க்கிறேன்.

எதனால் இந்த இடைவெளி?

'ஓர் இளைஞனும், ஒரு யுவதியும், காத லின்றி நெருங்க முடியாது' என்று நம்பிக் கொண்டிருந்தவர்களின் மத்தியில்தான் நாம் நண்பர்களாக வலம் வந்தோம்.

'ஒருவர் மீது ஒருவர் வைத்திருந்த தூய்மை யான அன்பில் அப்பழுக்கற்ற ஒரு நட்பை நாம் வளர்த்துக் கொண்டோம்.

நீ என் எழுத்தை ரசித்தாய்...

நான் உன் பேச்சை ரசித்தேன்!

அந்த நாட்களில் நான் எழுதிய கிறுக்கல் கதைகளை, கவிதைகளைப் படித்துப் பார்த்து நீ பிரமிப்புடன் சொன்னது உனக்கு இன்று நினைவிருக்கிறதா?

'பாபு... ஒரு பெண்ணின் மென்மையான



உணர்வுகளை உங்களால் எப்படி இவ்வளவு ஆழமாகப் புரிந்து கொள்ள முடிகிறது? வெல்டன்... கீப் இட் அப்!'

ஆனால் சுதா, குறைந்தபட்சம் உன்னை யாவது நான் முழுமையாகப் புரிந்து கொண்டிருக்கிறேனா என்று எனக்கு இப்போது சந்தேகமாக இருக்கிறது.

எதற்காக இந்த நட்பின் கழுத்தைப் பிடித்து நெறித்துக் கொண்டிருக்கிறாய்...?

மூச்சுத் திணறுவது எனக்கு மட்டும் தானா?

அந்த இனிய நாட்கள்...

ஷேக்ஸ்பியரும், ஷெல்லியும், கம்பனும், காளிதாசனும், சங்கம்புழயும், எழுத்தச்சனும் — ஏன்; இன்றைய கவிஞர்கள் உட்பட நாம் யாரைப் பற்றியெல்லாமோ இலக்கியச் சர்ச்சை செய்து மகிழ்ந்திருக்கிறோம்...

கடல் கடந்து வந்துவிட்ட போதிலும் கூட அந்த நினைவுகளை இன்றளவும் சுமப்பதிலும், அந்தக் காலத்தின் தாள்களை ஒவ்வொன்றாகப் புரட்டிப் பார்த்துப் புல்லரித்துப் போவதிலும் ஒரு தனி சுகத்தை இப்போதும் நான் அடைவதுண்டு.

அந்த இலக்கியப் பரிவர்த்தனையை இன்னமும் தொடர விரும்பியே எனது கடிதங்களைத் தாராக அனுப்பிக் கொண்டிருக்கிறேன். ஆனால் நீயோ, பதில் ஏதும் எழுதாமல் மௌனம் சாதிக்கிறாய்...

எதனால்என்பதைப்புரிந்துகொள்ளமுடியவில்லை.

சுதா, திருமணம் என்பது ஒரு நல்ல நட்பின் முதுகெலும்பை முறித்து விடாது என்றே நான் இன்னமும் நம்பிக் கொண்டிருக்கிறேன்.

இதற்காவது பதில் எழுதுவாய் என்று எதிர்பார்க்கலாமா?

அன்புடன்,
பாபு.

— கடிதத்தைப் படித்துமுடித்த சுதாவின் கண்களில் இரண்டு சொட்டுக் கண்ணீர் எட்டிப் பார்த்தது.

மனது வலித்தது!

இந்தக் கடிதத்தைக் கிழித்துப் போட்டு விடலாமா?

'கூடாது' என்று மனது எச்சரித்தது! காலையில் அவள் கணவன் ஸ்கூட்டரில் ஆபீஸுக்குப் புறப்படும் போது, தெரு முனையில் போஸ்ட்மேனைப் பார்த்துப் பேசியதும், அவளுக்கு வந்த அந்தக் கடிதத்தைக் கையில் வாங்கி அப்படியும் இப்படியுமாகப் புரட்டிப் பார்த்துவிட்டு எதையோ யோசித்தவாறு மீண்டும் போஸ்ட் மேனிடம் கொடுத்து விட்டுப் போனதையும் அவளும் எதேச்சையாகப் பார்க்க நேர்ந்தது.

'ஒரு வேளை தன்னைப் பரீட்சித்துப் பார்ப்பதற்காக அவன் அப்படிச் செய்திருக்கக் கூடும்' என்றே அவளுக்குத் தோன்றியது.

அப்படித்தோன்றிய மாத்திரத்தில் உடம்பு முழுவதும் பரவி நின்ற அருவருப்பு...

''நான் இந்த அளவுக்குச் சந்தேகிக்கப்படுகிறேனா....

ஆர்த்திகேயன் — அவள் கணவன்!

கருத்த மேனியில் தீ கக்கும் உதடுகள்; சந்தேகப்படும் கண்கள். ஆறடி உயரத்தில் 'நான் ஆண்' என்கிற அகம்பாவம் செண்டி மீட்டர் செண்டி மீட்டராக வியாபித்திருக்கும் ஆஜானுபாகுத் தோற்றம்...

ஆடிட்டர் ஆபீஸில் உத்தியோகம்! ஆனால் போலீஸ் வேலைக்கு லாயக்கானவன். ஏனெனில் அங்குதான் 'எதையும் சந்தேகப்படு' என்பது பாலபாடம்!

அவன் எல்லோரையும் சந்தேகப்பட்டான்.

ஆபீஸ் நண்பர்களை வீட்டிற்கு அழைத்து வந்தால் எங்கே அவர்கள் தனக்குத் தெரியாமல் தன் மனைவியை 'ராவிக்' கொண்டு போய் விடுவார்களோ? என்று பயந்தான்.

எதிர்த்த வீட்டுக்காரரிடம் சுதா எதற்கோ பேசினால், 'எனக்குத் தெரியாமல் ஏதேனும் உண்டோ?' என்று சந்தேகப்பட்டான்.

'அலுவலகத்தில் அவளை யாரேனும் வசியப்படுத்தி விடுவார்களோ?' என்று பயந்து, திருமணத்திற்கு முன் அவள் பார்த்து வந்த வேலையை ராஜினாமா செய்ய வைத்தான்.

நாளும் கிழமையுமாக அவள் தன்னை அலங்கரித்துக் கொண்டு கோயிலுக்குப் புறப்பட ஆயத்தம் செய்த போது, மூன்று ரூபாய்க்கு ஒரு ஃப்ரேம் போட்ட சாமி படத்



ஜெமினி

தைக் கொண்டு வந்து அறையில் மாட்டி, 'இங்கேயே கும்பிடு போதும்!' என்று சொல்லி விட்டான்.

வீட்டிலிருக்கும் போது குளித்து, தலை வாரி, கூந்தலில் மல்லிகை சூடி, நல்ல புடைவையைக் கொஞ்சம் நாகரிகமாகக் கட்டிக் கொண்டு, முகத்துக்கு பவுடர் போட்டு, கண்ணுக்கு மைதீட்டி, நெற்றியில் சின்ன நாகப் பொட்டிட்டு, மலர்ந்த முகத்தில் மந்த காசப் புன்னகையுடன் இருக்க முயன்றால், 'நான் இல்லாத போது எவனை மயக்க இந்த அலங்காரம்?' என்று முணுமுணுத்தான்.

சினிமா, டிராமா, பீச், பார்க் என்று மனைவியை அழைத்துக் கொண்டு போவதை கூடுமானவரை தவிர்த்துக் கொண்டான்.

சினிமாவுக்கு மட்டும் எப்போதாவது அழைத்துப் போவான். அதுவும் இரவுக் காட்சிகளுக்கு மட்டுமே!

பகல் காட்சிக்குப் போனால் பத்து பேர் பல்லிளிப்பார்களாம்...

அப்படிப் போகும் இரவுக் காட்சிகளுக்குக் கூட சுதா மனைவியாக அல்ல; ஒரு வேலைக்காரி போலவே பின் தொடர வேண்டி இருந்தது.

ஆரம்ப நாட்களில் இதெல்லாம் தன் மீதுள்ள அளப்பரிய காதலினால், இவன் தன்னை 'தனக்கே தனக்கு' என்று நினைப்பதாக எண்ணிச் சுதா மகிழ்ந்ததுண்டு.

ஆனால் போகப் போக, 'இது தன் மீதுள்ள காதலினால் அல்ல; தன் மீதுள்ள அவநம்பிக்கையினால்தான்!' என்பது அவளுக்குப் புரிந்தது.

'தான் எங்கோ தோற்றுப் போய்விட்டோம்' என்ற எண்ணம் தோன்றிய போது, சுதா அதிர்ந்து போனாள். தனிமை வேளையில் தனக்குள் விசும்பினாள்...

நான்கு சுவர்களுக்குள் தனது எதிர்காலம் அடமானம் வைக்கப்பட்டிருப்பதை உணர்ந்தாள். மண வாழ்க்கையைப் பற்றிய தனது கனவுகள், கற்பனைகள் எல்லாம் சின்னாபின்னமாக்கப்பட்டிருப்பது புரிந்தது.

நயமாக அவனிடம் ஒன்றிரண்டு முறை தனது உள்ளக் குமுறலை எடுத்துச் சொன்னாள்.

ஆனால் அவனோ சர்வசாதாரணமாக, அலட்சியம் தொனிக்கும் குரலில், "இதோ பார் சுதா, கல்யாணமான பெண்ணுக்குப் புருஷன்தான் எல்லாமே! நான் என்ன நினைக்கிறேனோ, அதன்படி நடந்துக்க! அதுதான் உனக்கு நல்லது..." என்றான்.

அந்த 'நான்' என்கிற குரலில் அளவுக்கதிகமான அழுத்தம் இருந்தது; ஆணவம் தெரிந்தது.

சுதா குன்றிப் போனாள்.

ஒருநாள் —

அவளது கல்லூரித் தோழி சௌம்யா, நீண்ட பிரிவுக்குப் பின் அவளைப் பார்க்க வந்தாள்.

வந்தவள் சுதாவின் நிலை கண்டு அதிர்ந்தாள்.

"என்னடீ இது? சுதாவா நீ? என்னமா உருமாறிப் போயிட்டே...? உனக்கு என்னடி வந்தது?"

'யாரிடமாவது தன்னுடைய துக்கத்தைப் பகிர்ந்து கொள்ள மாட்டோமா?' என்று ஏங்கிக் கொண்டிருந்தவளுக்கு சௌம்யாவின் வரவு ஆறுதலாக இருந்தது. அவள் தன் மன பாரத்தையெல்லாம் அவள் முன் இறக்கி வைத்தாள். விழிகளில் கண்ணீர் பெருகியது.

சௌம்யா அதிர்ச்சியில் சிலையாக அப்படியே உட்கார்ந்து விட்டாள்.

ஒரு பெருமூச்சுக்குப்பின் அவள் தொடர்ந்தாள்: "சுதா! காலேஜ் நாட்கள்ள பட்டாம்பூச்சி மாதிரி வளைய வந்த நீயா இப்படி? காலேஜ் விழாக்கள்ள பெண் உரிமையைப் பத்தியும், பெண் சுதந்திரத்தைப் பத்தியும் ஆவேசமாப் பேசி முதல் பரிசுகளைத் தட்டிச் சென்ற உனக்கா இப்படி ஒரு கதி? என்னாலே ஜீரணிச்சுக்க முடியல்லேடீ..."

சுதா விரக்தியுடன் சொன்னாள்: "கழுத்துலே தாலி கட்டறதுக்காகத் தலையைக் குனியும் போதே, ஆண் ஆதிக்கத்துக்கு நாம அடிமைப்பட்டுப் போறோம்டீ... அப்புறம் நம்மோட உரிமைகளை நசுக்க அவங்களுக்குச் சொல்லியா கொடுக்கணும்?"

"எல்லா ஆண்களையும் அப்படிச் சொல்லாதேடீ..."

"சில பேர் இருக்காங்கதான்... ஆனா அதுக்கெல்லாம் நமக்குப் பிராப்தம் வேணும்டி... எனக்கு அது இல்லே... இது என்னோட தலைவிதி..."

"என்னடீ பெரிய தலைவிதி? நீ நினைச்சிருந்தா இதை மாத்தியிருக்க முடியாதா? தாலிங்கறது சுகம். அது சுமையா மாறும் போது தூக்கி எறிய வேண்டியதுதானே முறை..."

"எறிஞ்சுடலாம்தான். ஆனா அதுக்கப்புறம் நாம போய் விழறது ஆண் ஓநாய்ங்களுக்கு மத்தியிலேதானே... நம்ம சதையைக் கூறு போடறதுக்கு அதுங்க எல்லாம் பசியோட காத்துக்கிட்டிருக்கேடீ..."

"அதுக்காக இப்படியே இருந்துடறதுன்னு முடிவு பண்ணிட்டியா?"

"வேறென்ன செய்ய? காளை மாடு கதறக் கதற காயடிக்கப்பட்டு அதை உழவு மாடா ஆக்கறதில்லையா? அதுக்கப்புறம் அந்த உழவு மாடு தன்னோட எஜமானனோட வயல்லே உடல் வலிக்க உழைக்கிறதில்லையா? யார் கவனிக்கிறார்கள் அதோட ஆசாபாசங்களை! அதுமாதிரி நான் ஒரு உழவுமாடுடீ..." சுதாவுக்குக் கண்களில் நீர் முட்டிக் கொண்டு நின்றது.

"இதைவிட நீ தனியாவே வாழ்ந்துட்டுப் போகலாம்..." — சௌம்யா வெறுப்புடன் சொன்னாள்.

"காலம் தவறிப் போச்சுடீ..."

"நீ என்னடி சொல்றே?"

"கண்ணு விழிக்க எல்லாத்தையும் புரிஞ்சுக்கறதுக்கு முன்னாலே இரண்டு குழந்தைங்களோட அம்மா ஆயிட்ட நான் அதுக்கெல்லாம் இனிமே ஆசைப்பட முடியாதுடீ...




# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

# குணு

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம்.
பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும்,
தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலை மயிர்
நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு
பொடுகு. மண்டையில் சொறிந்தால் செதில் உரிதல்
குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும்
விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 001**

## இப்பொழுது கவர்ச்சியான புதிய பேக்கிங்கில் கிடைக்கிறது

எமது தைலம் கிடைக்குமிடங்கள் : 1. சேலம் — ரோக மெடிக்கல்ஸ் 2. ஆத்தூர் — முத்து மெடிக்கல்ஸ். 3. நாமக்கல் — கஸ்தூரிபா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம் — ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ். 5. மேட்டூர் — ஜெயலக்ஷ்மி மெடிக்கல்ஸ். 6. திருச்செங்கோடு — சீனிவாசா மெடிக்கல்ஸ். 7. தர்மபுரி — விஜயலக்ஷ்மி மெடிக்கல்ஸ். 8. கிருஷ்ணகிரி — கோபாலகிருஷ்ணா மெடிக்கல்ஸ். 9. ஒசூர் — மூர்த்தி மெடிக்கல்ஸ். 10. பெங்களூர் — பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள். 11. சென்னை-3 — ஹேமா மெடிக்கல்ஸ். 12. அமிஞ்சிகரை — வேலவன் மெடிக்கல்ஸ். 13. குடியாத்தம் — திருமகள் மெடிக்கல்ஸ். 14. காஞ்சிபுரம் — லக்ஷ்மி மெடிக்கல்ஸ். 15. அரக்கோணம் — அகிலாம்பிகை மெடிக்கல்ஸ் 16. ஆரணி — பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை. 17. திருவண்ணாமலை — அன்னை மெடிக்கல்ஸ். 18. வேலூர் (N.A.) — பாரத் மெடிக்கல்ஸ். 19. திருப்பத்தூர் (N.A.) — லக்ஷ்மி மெடிக்கல்ஸ். 20. விழுப்புரம் — அன்பு மெடிக்கல்ஸ். 21. கள்ளக்குறிச்சி — A. ராஜீ நாட்டு மருந்துக்கடை 22. கும்பகோணம் — செல்வம் மெடிக்கல்ஸ். 23. தஞ்சாவூர் — சிட்டி மெடிக்கல்ஸ். 24. திருச்சி — சண்முகா மெடிக்கல் ஹால். 25. திண்டுக்கல் — தமிழ் நாடு சித்த மருந்துக்கடை. 26. பெரியகுளம் — N. லக்ஷ்மணன் மருந்துக்கடை. 27. தேனி — ஆண்டாள் மெடிக்கல்ஸ் 28. மதுரை — குமார் மெடிக்கல்ஸ். 29. மதுரை ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை). 30. ராமநாதபுரம் — பாத்திமா மெடிக்கல்ஸ். 31. காரைக்குடி — மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ். 32 விருதுநகர் — S.S.K. மெடிக்கல்ஸ். 33. தூத்துக்குடி — அன்பு மெடிக்கல்ஸ். 34. திருநெல்வேலி — கோமதி மெடிக்கல்ஸ். 35. பாளையங்கோட்டை — ஓலிவா இந்தியன் மெடிக்கல்ஸ். 36. நாகர்கோவில் — S. நல்ல பெருமாள் மருந்துக்கடை 37. தென்காசி M.R. மெடிக்கல்ஸ். 38. ராஜபாளையம் — அரவிந்த் மெடிக்கல்ஸ். 39. விழுப்புரம் விசாலம் மெடிக்கல்ஸ். 40. கோவில்பட்டி — சாந்தி மெடிக்கல்ஸ். 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் — பாலாஜி மெடிக்கல்ஸ். 42. உடுமலை ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ். 43. பொள்ளாச்சி — ராமநாதன் மெடிக்கல்ஸ். 44. கோவை — காசிநாத் அண்ட் கோ., 45. கோவை — திருமலை மெடிக்கல்ஸ், காந்திபுரம். 46. திருப்பூர் — கீதா மெடிக்கல்ஸ். 47. சிவகங்கை குணு & கோ (கெமிஸ்ட்). 48. கோபி — வாணி பார்மஸி. 49. ஈரோடு — ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிக்கல்ஸ். 50. திருச்சி ஜங் சுபஸ்ரீ மெடிக்கல்ஸ். 51. புதுக்கோட்டை — மீனு பார்மஸி. 52. திருவாரூர் — அன்னபூர்ணா மெடிக்கல்ஸ். 53. மாயவரம் — ஸ்வாமி மெடிக்கல்ஸ். 54. சிதம்பரம் — ராஜா பார்மஸி. 55. விருத்தாச்சலம் — ஜெயா பார்மஸி. 56. சேலம் செவ்வாய்பேட்டை — பிரபாத் மெடிக்கல்ஸ். 57. திருவண்ணாமலை — ஸ்ரீ அண்ணாமலையார் மெடிக்கல்ஸ். 58. கிருஷ்ணகிரி — பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ். 59. கரூர் — அண்ணாமலை மெடிக்கல்ஸ். 60. நாமக்கல் சரஸ்வதி மெடிக்கல் ஹால். 61. காரைக்குடி — சரோஜா ட்ரக்ஸ் ஸ்டோர்ஸ். 62. பாண்டிச்சேரி ராஜா மெடிக்கல்ஸ். 63. திருவனந்தபுரம் — தாஜு & கோ., 64. மதுரை 1 பாலீன் மெடிக்கல்ஸ். 65. நாகை — ரங்கா ஸ்டோர்ஸ். 66. மைலாப்பூர் — R.R. பார்மஸி. 67. தி. நகர் — சுந்தரம் ஸ்டோர்ஸ் (கெமிஸ்ட்) 68. சேலம் சாமுண்டி சூப்பர் மார்க்கெட். 69. கடலூர் — சிவா மெடிக்கல்ஸ். 70. ஊட்டி — நீலகிரிஸ் ட்ரக் ஸ்டோர்ஸ் & பார்மஸி. 71. தஞ்சாவூர் 1 சிங்காரம் மெடிக்கல்ஸ் மார்ட். 72. மதுரை — 1 தனலட்சுமி ஏஜன்ஸீஸ்

## இப்பொழுது எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது

எமது நவரத்ன கல்ப [illegible] சக்திக்கும் [illegible]
1 புட்டி ரூ 30/– **V.P.P.** உண்டு. தபால் செலவு இல்லை. [illegible]

# வாசகர் பட்டி மன்றம்-12 பரிசு ரூ. 3001/-



**இந்தியாவில் கிரிக்கெட்டுக்குத் தரப்படும் முக்கியத்துவம்:**

**அநியாயம், அக்கிரமம்!**

**நல்லதே, நியாயமே!**

உங்கள் முடிவு என்ன? (கருத்து: உமார்த்தி, கோவை) அனுபவபூர்வ மான எண்ணங்களைக் கல்கியில் அரைப்பக்க அளவில் அடங்குகிற மாதிரி எழுதி அனுப்புங்கள்.

இருதரப்பிலும்ஒவ்வொருகட்டுரைக்குப் பரிசு ரூ. 100.

தவிர இரு தரப்பிலும் ஐந்து ஐந்து ஆறுதல் பரிசுகள். தலா ரூ. 10. இவர்களுடையஒவ்வொருசிறப்பானவாதம் மட்டும் பிரசுரமாகும்.

எந்தக் கட்சிக்கு அதிக ஆதரவு என்பதை மதிப்பெண் உணர்த்தும்.

**முடிவு தேதி: நவம்பர் 3, 1986.**

வேண்டுகோள்: உறையின் மீது ''பட்டி மன்றம் — 12'' என்று குறிப்பிடவும்.

நிபந்தனை: கீழே விலாசம் எழுதி இந்த அரைப்பக்கத்தை முழுவதுமாகக் கத்திரித்துக் கட்டுரையுடன் இணைக்க வேண்டும்.

பெயர்: ....................

விலாசம்: ....................

....................

இனிமே அவங்களுக்காவது நான் இதையெல்லாம் சகிக்கக்கத்தான் வேணும்...''

சௌம்யா எதுவும் பேசத் தோன்றாமல் மௌனமானாள்.

அன்றைக்கு விடைபெற்றுக் கொண்டு போனவள் அதற்குப் பிறகு ஏனோ வரவேயில்லை.

**பாபு** — அவளது அலுவலகத் தோழன்!

அப்படி ஒன்றும் அவன் அழகன் இல்லை. மாநிறம். மெலிந்த தோற்றம். சின்ன உதடுகள். எடுப்பான நாசி. ஆனால் அந்தக் கண்கள் இருக்கிறதே: அது அவனுக்கு வரப்பிரசாதம்.

இலக்கியச் சர்ச்சையின் போது அந்தக் கண்களில் அறிவின் ஒளி சுடர்விட்டுப் பிரகாசிக்கும்.

சமுதாயக் கொடுமைகளை அவன் அலசும் போது, அந்தக் கண்களில் அக்னி எரியும்.

அன்பு, பாசம், காதல், தாய்மை, இவற்றைப் பற்றிப் பேசும் போது அந்தக் கண்களில் கனிவு தெரியும்.

'டெஸ்பாட்ச் கிளார்க்' ஆக அவள் அலுவலகத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த போது, கனமேறிய தபால் உறைகளை அவளிடம் கொடுத்து, ''மிஸ், சுதா, ப்ளீஸ்... இதுக்கு எவ்வளவு ஸ்டாம்ப் ஒட்டணும்னு பார்த்துச் சொல்லுங்களேன்...'' என்றான் முதன் முதலாக!

''என்ன இது?''

அவன் தயங்கித் தயங்கிச் சொன்னான்: ''கதைகள், கவிதைகள்...''

அவள் ஆச்சரியத்துடன் கேட்டாள்: ''ஓ! கதை எழுதுவீங்களா? எங்கே? நான் படிக்கலாமா...?''

— அப்படித்தான் தொடங்கியது அந்த நட்பு!

அவனது எழுத்துக்களைப் படித்து அவள் பிரமித்தாள்; பரவசப்பட்டாள்.

'பெண்களின் மன உணர்வுகளை இவன் எவ்வளவு நுண்ணியமாகப் புரிந்து வைத்திருக்கிறான்...

போகப் போக அவனுடன் இலக்கிய சர்ச்சைகளில் ஈடுபடுவது என்பது அவளைப் பொறுத்தவரை தவிர்க்க இயலாத பொழுது போக்காகி விட்டது.

ஞாயிற்றுக்கிழமை நாட்களில் அவள் ரொம்பவும் தவித்துப் போனாள். தூக்கமில்லாத இரவுகளில் அவனது நினைவு துணைக்கு வந்தது.

'நான் அவனைக் காதலிக்கிறேனோ...?'

'இல்லையில்லை: இது நட்புதான்...' என்று அவள் முகம் கட்டியம் கூறியது.

ஒருநாள் 'அவன் அழைத்தானே' என்று அவள் அவன் வீட்டிற்குப் போனாள்.

அங்கு ஒரு நிலா முகம் தெரிந்தது.

அவன் மனைவி ப்ரியா அழகாக இருந்தாள்!

சுதாவை அன்புடன் வரவேற்றாள்! அவள் குரலில் [illegible] யானது. எழுத்துக் கூட் [illegible] த்தாள்.

## உங்களின் கை பட்டால்
## தனிச்சுவை மின்னுவது போல
## எங்களின் கை பட்டால்
## தரம் அங்கே மின்னும்.

சேலம் ஸ்டீல். எங்களின் ஒவ்வொரு படைப்பும் உலகம் அளவு விஷயத்தை உள்ளடக்கியது. கண்ணால் காணமுடியாத பல இரகசியங்கள் அதிலே மின்னும்-மலரின் மணத்தைப் போல. எனவே நாங்கள் சிறந்ததையே நாடுகிறோம். மூலப்பொருளிலும்-தொழில் நுட்பத்திலும். சின்னச்சின்ன விஷயத்தில் கூட வெகு நுட்பமாக கவனம் செலுத்துகிறோம். ஒவ்வொரு கட்டத்திலும் மிகவும் நுண்ணிய பரிசோதனைக்கு உட்படுவதால் தரம் அங்கே மின்னுகிறது.

கண்ணுக்குத் தெரியாதபல இரகசியங்கள் எங்களின் ஒவ்வொரு படைப்பிலும் ஒளிந்திருப்பது இப்போது நன்றாகப் புரியும். எங்களின் தர கவனம்--உங்களின் படைப்பு போல.



**சேலம் உருக்காலை**
சேலம் 636 013 தமிழ்நாடு
ஸ்டீல் அதாரிட்டி ஆப் இந்தியா லிமிடெட்
ஒரு இந்திய அரசு நிறுவனம்

## சேலம் எவர்சில்வர்.

கேட்டு வாங்குங்கள். எங்களின் தரமே எல்லை! எவரும் இதுவரை தந்ததே இல்லை!

Sista's - SSP.559.86 TM C

பிறகுதான் புரிந்தது!

'சிந்து நதியின் மிசை நிலவினிலே; சேர நன்னாட்டிளம் பெண்களுடனே...' என்ற பாரதி சொல்லுக்கு ஏற்ப, அவன் ஒரு சேர நாட்டு மங்கையை — கேரளத்து அழகியைக் காதலித்து மணம் செய்து கொண்டிருந்தான் என்பது!

ப்ரியா அவனை ஆழமாக நேசித்தாள்; அவனது உணர்வுகளைப் பங்கு போட்டுக் கொண்டாள்.

சுதா அந்த அன்பைக் கண்டு நெகிழ்ந்து போனாள்...

''பாபு! ஆண்டவன் இந்த முடிச்சை எவ்வளவு அழகாகப் போட்டிருக்கிறான்...'' என்று கூறி மகிழ்ந்தாள்.

சில ஆண்டுகளில் அவன் தன் வேலையை ராஜினாமா செய்துவிட்டு வெளிநாடு போய்ச் சேர்ந்தான். கூடவே தன் மனைவியையும் அழைத்துக் கொண்டான்.

சுதாவுக்குத் திருமணம் ஆயிற்று! அவனிடமிருந்து கடிதமும் தொடர்ந்து வந்தது!

ஆனால் அவனை பதில் எழுத விடாமல் கார்த்திகேயன் தடுத்துக் கொண்டே இருந்தான். சுதா எதையோ பறி கொடுத்த உணர்வில் பரிதவித்தாள்...

'பாபு, உங்கள் வரையில் இறைவன் அழகான முடிச்சுப் போட்டு வைத்தான். ஆனால் நான்? மலைப்பாம்புக்கு முன்னால் எறியப்பட்ட இரையாகிப் போனேன். அது என்னைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்கிக் கொண்டிருக்கிறது...' — சுதா மனத்துக்குள் குமுறினாள்.

அப்போது —

கதவு தட்டப்படும் சப்தம் கேட்டது.

சுதா கண்ணீரைத் துடைத்துக் கொண்டு எழுந்து சென்றாள்.

கார்த்திகேயன் அவளை ஏற இறங்கப் பார்த்தான். சுதா மௌனமாகக் கடிதத்தை எடுத்து வந்து அவன் கையில் கொடுத்தாள்.

மௌனமாகப் படித்து முடித்தபின் அதை நான்காக மடித்து அவள் கைகளில் கொடுத்த பின், அவளை மேலும் கீழும் சந்தேகக் கண்களுடன் பார்த்தான்.

அவனது பார்வையின் கூர்மையில் அவள் புழுவாக நெளிந்தாள்.

''பதில் போடப் போறியா?''

'போடட்டுமா?' என்று கேட்க நினைத்தவள் ஒன்றும் பேசாமல் மௌனம் சாதித்தாள்.

''இதோ பார் சுதா! கல்யாணத்துக்குப் பின் ஒரு பெண்ணுக்குப் புருஷன்தான் எல்லாமே! சில பேர் இப்படித்தான்... எழுதி எழுதியே பெண்களை வசியம் பண்ணிடுவாங்க... இலக்கியமாம்; சர்ச்சையாம்... எல்லாம் சுத்த ஃப்ராடு. எவன் கிட்டே வந்து காது குத்தறான்? ப்ளடி இடியட்...''

'நீதாண்டா இடியட்!' என்று அவனுக்குக் கத்த வேண்டும் போலிருந்தது.

''அந்தக் கடிதத்தைக் கொண்டா இப்படி...'' அவளிடமிருந்து கடிதத்தை வாங்கியவன் அதைச் சுக்கு நூறாகக் கிழித்து வெளியே எறிந்தான்.

சுதா கட்டிலில் போய்க் குப்புற விழுந்து குமுறிக் குமுறி அழுதாள்.



# "சொற்களை விட செயல்களையே விரும்புகிறேன்!"

— காமராஜர் மாவட்டக் கலெக்டர் பேட்டி

கல்கி: விருதுநகரில் உள்ள காமராஜர் இல்லத்தில் காமராஜரோடு எம். ஜி. ஆர். இருக்கும் படம் ஒன்று பெரிய அளவில் முக்கியத்துவம் கொடுத்து வைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் கருணாநிதி இருக்கும் படம் மட்டும் இல்லவே இல்லை! என்ன காரணம்?

காமராஜர் மாவட்ட கலெக்டர் எல். என். விஜயராகவன் (பி. ஆர். ஓ. வைப் பார்க்க அவர் சொல்கிறார்): சென்னையிலுள்ள செய்தி — மக்கள் தொடர்புத்துறையின் தலைமை அலுவலகத்திற்கு எழுதியிருக்கிறோம். வந்தவுடன் வைத்து விடுவோம்!

கல்கி: விருதுநகர் பஸ் ஸ்டாண்டு ஒரு மாவட்டத் தலைமையிடத்தின் பஸ் ஸ்டாண்டு தானா? படுமோசம்!

கலெக்டர்: கடுமையான இடநெருக்கடி இருப்பது உண்மைதான். விரைவில் இந்த பஸ் ஸ்டாண்டை சாத்தூர் ரோடிலுள்ள விஸ்திரணமான இடத்திற்கு மாற்ற இருக்கிறோம்.

கல்கி: விருதுநகரில் குடிநீர் என்பது பெரும் பிரச்னையாக இருக்கிறது. ஹோட்டல்களிலெல்லாம் நகரின் மையத்திலிருக்கும் தெப்பக் குளத்திலிருந்துதான் தண்ணீர் கொண்டு வந்து பயன்படுத்துகிறார்கள். இந்தப் பிரச்னைக்குத் தீர்வு என்ன?

கலெக்டர்: குடிநீர்ப் பிரச்னை இருப்பது வாஸ்தவம்தான். இப்போது ஆனைக்குட்டத்திலிருந்து லாரிகளில் கொண்டு வந்து சப்ளை செய்து கொண்டிருக்கிறோம். விரைவில் துலுக்கப்பட்டி சிமெண்ட் ஆலைக்குத் தேவையான சுண்ணாம்புக் கற்களுக்காக ஒண்டிப்புலி நாய்க்கனூரில் தோண்டப்படும் பிரம்மாண்டமான கல்கோரி (சுரங்கம்!)யிலிருந்து குடிநீர் கொண்டு வரும் திட்டத்தைச் செயல்படுத்த உள்ளோம். இதுவும் தற்காலிகத் தீர்வுதான். நிரந்தரத் தீர்வு என்பது தாமிர பரணியிலிருந்து குடிநீர் கொண்டு வரும் திட்டம்தான். அதற்கு உலக வங்கியின் உதவியை நாடியுள்ளோம்.

கல்கி: வணிகவரித்துறை அலுவலகத்தில் இருக்க வேண்டிய 'பாரம் — 20' ன் முதல் பிரதிகளும் வியாபாரிகளிடம் இருக்க வேண்டிய இரண்டாவது பிரதிகளோடு இருப்பதை நாங்களே கண்கூடாகக் கண்டோம். அதாவது வணிகவரித்துறை அதிகாரிகளின் ஊழல் இந்த அளவுக்கு அதிகமாக இருக்கிறது!

கலெக்டர்: இதுகுறித்து எதுவும் இதுவரை என் கவனத்திற்குக் கொண்டு வரப்படவில்லை. (வந்திருந்த அலுவலர்களைப் பார்த்து) வணிகவரித் துறையிலிருந்து வந்திருப்பவர்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

வணிகவரித் துறையிலிருந்து வந்திருந்த அதிகாரி: அப்படியெல்லாம் ஒன்றுமில்லை சார். முதல் பிரதிகளெல்லாம் எங்களிடம் தான் இருக்கின்றன. அவை எப்படி வியாபாரிகளிடம் போகும்?

கல்கி: எப்படிப் போகிறது என்றுதான் நாங்களும் கேட்கிறோம்!

வ. வரித்துறை அதிகாரி: நிச்சயமாக முதல் பிரதிகளெல்லாம் எங்களிடம்தான் இருக்கின்றன.

கல்கி: நாங்கள் கண் கூடாகக் கண்டோம். வியாபாரிகளே எங்களிடம் காட்டினார்கள். முதல்பிரதிகளை உங்கள் அலுவலகத்தினரே கொண்டு போய் வியாபாரிகளிடம் கொடுத்துவிட்டு 'மாமூல்' வசூலிப்பதாக வியாபாரிகளே சொன்னார்கள்.

கலெக்டர்: வியாபாரிகள் அப்படிப்பட்ட புகார்களை என்னிடம் கொண்டு வந்தால் நான் நடவடிக்கை எடுக்கத் தயாராய் இருக்கிறேன்.

கல்கி: காமராஜர் மாவட்டம் பிரிக்கப்பட்ட பின்பும் — நீதிமன்றங்களுக்காகக் கடந்த 20.10.85 லிருந்து நீங்கள் ஒரு கட்டடத்தைத் தயார் நிலையில் வைத்திருந்தும் மதுரையிலிருக்கும் நீதிமன்றங்கள் இன்னமும் விருதுநகருக்கு மாற்றப்படவில்லையே, ஏன்?

கலெக்டர்: அரசு ஆணை வரவில்லை. அது தான் காரணம்.

கல்கி: விருதுநகரில் மட்டுமல்லாமல் மாவட்டத்திலுள்ள பல சினிமா தியேட்டர்களிலும் அச்சிடப்பட்டுள்ள கட்டணத்திற்கு

அதிகமாகவசூலிக்கிறார்கள். படத்தின்இடையில் திடீரென்று புளூ ஃபிலிம் போட்டுக் காட்டுகிறார்கள் என்பது பலருடைய குற்றச்சாட்டு.

கலெக்டர்: இதுபோன்ற குற்றச்சாட்டுகள் என்னிடமும் வருவதுண்டு. இதன் காரணமாகவே ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள செல்வம் தியேட்டர்; விருதுநகரிலுள்ள முருகன் தியேட்டர் ஆகியவற்றின் மீதுநடவடிக்கை எடுத்திருக்கிறேன். அவ்வப்போது ரகசிய விசிட்களும் செய்து கொண்டிருக்கிறோம்.

கல்கி: விருதுநகரிலிருந்து அருப்புக்கோட்டை செல்லும் பாதையின் இருபுறங்களிலுமுள்ள பெரிய பெரிய புளிய மரங்களெல்லாம் மொட்டை மொட்டையாக வெட்டப்பட்டிருப்பதற்கு என்ன காரணம்? யார் காரணம்?

கலெக்டர் (நெடுஞ்சாலைத் துறை அதிகாரியைப் பார்க்க அவர் சொல்கிறார்): பட்டுப் போன மரங்களைத்தான் வெட்டுவதற்கு ஏலம் விட்டிருக்கிறோம். நல்ல மரங்களை அல்ல.

கல்கி: பட்டுப் போன மரங்களுக்கும் நல்ல மரங்களுக்கும் கூட எங்களுக்கு வித்தியாசம் தெரியாதா? நல்ல மரங்களைத்தான் மொட்டை மொட்டையாக ரம்பம் போட்டு அறுத்தெடுத்திருக்கிறார்கள். அறுத்தெடுக்கப்பட்ட கிளைகளிலெல்லாம் அற்புதமாகத் துளிர் விட்டுத் தழைத்திருப்பதைப் பார்த்தாலே தெரியாதா, அவை நல்ல மரங்கள்தான் என்று!

கலெக்டர்: அவையெல்லாம் பொது மக்களால் திருட்டுத்தனமாக வெட்டப்பட்டவை.

கல்கி: நம்ப முடியவில்லை. மெயின் ரோடிலுள்ள மரங்களை மணிக்கணக்காக இருந்து அறுத்தெடுத்துக் கொண்டு போகும் அளவுக்குத் திருடர்களுக்குத் தைரியம் இருக்குமென்று நாங்கள் நம்பவில்லை. இது சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குத் தெரிந்தேதான் நடந்து கொண்டிருக்கிறது என்பதுதான் எங்கள் முடிவு.

கலெக்டர்: விசாரிக்கிறேன்.

கல்கி: இதேபோல்தான் ராஜபாளையத்திலிருந்து சிவகிரி வரையிலுள்ள வனப்பகுதியின் நிலையும். அந்தப் பகுதி இப்போது ஏறத்தாழ அழிக்கப்பட்ட நிலைதான் என்று சுற்றிப் பார்த்தவர்கள் கூறுகிறார்கள்!

கலெக்டர்: அந்தப் பகுதி கொஞ்சம் அடர்த்தி குறைந்து அழிந்து போயிருப்பது உண்மைதான். ஆனால் அதற்குச் சரிவர மழையில்லாததுதான் காரணமே தவிர வேறில்லை.

கல்கி: தினசரி, கால் நடையாகவும், சைக்கிள்கள், லாரிகள் மூலமாகவும் கடத்தப்படுவதென்பது உண்மை. அதற்கு வனத்துறை அதிகாரிகளும் உடந்தை என்கிறார்கள் மக்கள்!

கலெக்டர் (மாவட்ட வனத்துறை அதிகாரியைப் பார்க்க அவர் பதில் சொல்கிறார்): நிச்சயமாக மரங்கள் கடத்தப்படவும் இல்லை. அதற்கு வனத்துறை அதிகாரிகள் உடந்தையும் இல்லை.

கல்கி: அப்படியானால் எதற்கு ராஜபாளையம் அருகில் புதிதாக ஒரு செக்—போஸ்ட் வைத்திருக்கிறீர்கள்? அதிலிருந்தே கடத்தல் இருப்பது உண்மையாகிறது அல்லவா!

கலெக்டர்: செக்—போஸ்ட் வைப்பதில் தவறேதுமில்லையே!

கல்கி: தவறு என்று நாங்களும் சொல்லவில்லை. கடத்தல் நடந்து கொண்டிருக்கிறது என்பதற்குப் புதிய செக்போஸ்ட்டே அத்தாட்சி என்றுதான் சொல்லுகிறோம்.

கலெக்டர்: நிச்சயம் நடவடிக்கை எடுப்போம்.

கல்கி: இருபத்தொரு கோடி ரூபாய் செலவில் போடப்பட்ட அழகர் அணைத் திட்டம் என்னவாயிற்று? அதற்காகப் பத்து லட்சம் வரையில் செலவழிக்கப்பட்டிருப்பதாகவும் தெரிகிறதே, வீண்தானா?

கலெக்டர்: அது தமிழ்நாடு — கேரளா சம்பந்தப்பட்ட இரு மாநிலங்கள் தொடர்பானதாக இருப்பதால்தான் மேற்கொண்டு திட்டம் தொடரவில்லை.

கல்கி: ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள மஞ்சப்புத் தெரு அருகில் இன்னமும் தேவடியாக்குடி என்று அழைக்கப்படும் இடம் இருக்கிறது. அங்கு 'செண்டு' என்ற பெண்மணி பல பெண்களை வைத்துக் கொண்டு விபசாரத் தொழில் நடத்துவதாக ஊரிலுள்ள அனைவரும் சொல்கிறார்கள்!

கலெக்டர் (மாவட்டக் காவல்துறை கண்காணிப்பாளரைப் பார்க்க, அவர் பதில் சொல்கிறார்): உண்மைதான். அந்தப் பெண்ணை நாங்களும் பல முறை கைது செய்து கேஸ் போட்டிருக்கிறோம். அபராதம் கட்டிவிட்டு வந்தவுடனேயே மறுபடியும் தொழிலை ஆரம்பித்து விடுகிறாள். என்ன செய்வது? இப்போது, விபசாரத்திலீடுபடும் ஆண்களுக்கும் தண்டனை விதிக்கும் புதுச் சட்டம் வரப் போவதால், அதைக் கொண்டு இதை ஒழித்துவிட முடியுமென்று நம்புகிறோம்.

கல்கி: சுமார் நானூறு குடும்பங்கள் வசிக்கும் பெருமாள்தேவன் பட்டியிலுள்ள பெரும்பாலான ஆண்கள் மிலிட்டரியில் தான் பணியாற்றுகிறார்கள். தங்கள் கணவன், அண்ணன், தம்பி, அப்பா ஆகிய அனைவரையும் மிலிட்டரிக்கு அனுப்பியிருக்கும் அவ்வூர்ப் பெண்கள் குடிநீருக்குப் படும் அவதி சொல்லி முடியாது! ஊரிலிருக்கும் ஒரு பொதுக் கிணற்றிலும் தண்ணீர் சேந்த உருளைகள் கூட இல்லாத அவலம்! இது என்ன நியாயம்?

கலெக்டர் (உடனடியாகக் குறித்துக்கொள்கிறார்): உடனடியாக நடவடிக்கை எடுக்

கிறேன்.

கல்கி: கன்னித்தேவன்பட்டி எனும் ஊர் வெள்ளத்தால் பாதிக்கப்படாமல் இருக்க ஆங்கிலேயர்கள் காலத்தில் கட்டப்பட்ட கல் சுவர் இப்போது பாழடைந்து கிடக்கிறது. மழைக்காலத்தில் ஆற்றைக் கடந்து வரப் பாலம் இல்லை. குடிநீருக்காகக் கட்டப்பட்ட மேல்நிலை நீர்த்தொட்டி வேலைகள் பாதியில் நிற்கின்றன. சத்துணவுக் கூடம் இல்லாததால் குழந்தைகளுக்கு வெட்டவெளியில் சமைத்துத்தான் பரிமாறுகிறார்கள்.

கலெக்டர் (எல்லாவற்றையும் குறித்துக் கொள்கிறார்): உடனடியாக நடவடிக்கை எடுக்கிறேன். அடுத்த நிதியாண்டில் பாலமும், சத்துணவுக்கூடமும் கட்டப்பட ஆவன செய்கிறேன்.

கல்கி: மேலாண்மறை நாட்டில் இரண்டு கண்மாய்கள். அதில் ஒன்பதாண்டுகளுக்கு முன்பு நான்கு லட்சம் செலவில் கட்டப்பட்ட கண்மாய் ஆண்டுதோறும் உடைப்பெடுத்துக் கொண்டிருக்கிறது. அதற்கு காண்ட்ராக்டர்கள் சரியாகக் கட்டாததுதான் காரணம் என்கிறார்கள். இரண்டாவது கண்மாயின் கடைசி கட்ட வேலைகள் இன்னும் முடிவடையவில்லை. அதற்குக் காரணம், கிருஷ்ணசாமி என்ற விவசாயி தனது நிலத்தைக் கண்மாய்க்காகக் கொடுக்கவில்லையாம். கண்மாயின் ஆயக்கட்டுப் பகுதியில் அந்த விவசாயியின் அரை ஏக்கர் நிலத்தைச் சேர்த்துக் கொள்வதாகச் சொன்ன அதிகாரிகள் பிறகு முடியாதென்று சொல்லிவிட்டார்களாம். அதனால்தான் அவ்விவசாயி தனது நிலத்தைத்தர மறுக்கிறாராம். ஏன் இப்படி?

கலெக்டர் (பொதுப் பணித்துறை அதிகாரியைப் பார்க்க, அவர் சொல்கிறார்): அந்த விவசாயிக்கு நாங்கள் அப்படி எதுவும் வாக்குக் கொடுக்கவில்லை. அதோடு, அவர் நிலத்திற்குக் கண்மாய்ப் பாசனம் செய்யவும் வழியில்லை. முதல் கண்மாய் உடைப்பெடுப்பது, வெள்ளத்தின் அளவு அதிகமாகும் போதுதான். அதையும் உடனடியாகச் சரி செய்து விடுகிறோம்.

கல்கி: வலையப்பட்டியில் கடந்த 11.9.85 அன்று நடந்த மனுநீதி நாளின் போது இருபத்தொன்பது வயதான குருசாமி எனும் குருட்டு அன்பருக்கும், அப்பயநாய்க்கன்பட்டியைச் சேர்ந்த பத்தொன்பது வயதான ஆவுடை லட்சுமி எனும் தந்தையில்லாத குருட்டுப் பெண்ணுக்கும் உடனடியாக உதவித் தொகை வழங்க அந்த இடத்திலேயே உத்தரவிட்டீர்களாம். ஆனாலும் இன்றுவரை கிடைக்கவில்லையாமே!

கலெக்டர் (தமது உதவியாளரைப் பார்த்து): இன்னுமா கிடைக்கவில்லை? இது போன்ற விஷயங்களில் நடைமுறைகளையெல்லாம் ஒத்தி வைத்துவிட்டு உடனடியாக அனுப்பி வையுங்கள். (பிறகு நம்மைப் பார்த்து) இனி உடனடியாகக் கிடைத்து விடும்.

கல்கி: மிளகாய்ப்பட்டி எனும் கிராமத்திலுள்ள பள்ளர் எனும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு, அருப்புக்கோட்டை கோட்ட கிராமிய கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கத்தின் மூலமாக வீடு கட்டக் கடன் கொடுப்பதாகச் சொல்லி, "இருக்கிற குடிசைகளை இடித்து விட்டு அஸ்திவாரம் போடச் சொன்னார்களாம். அவர்களும் சிரமப்பட்டு அஸ்திவாரம் போட்டிருக்கிறார்கள். ஆனால் இது வரை — கடந்த ஐந்தாண்டு காலமாகக் கடன் தொகை கொடுக்கப்படவில்லை!

கலெக்டர்: இது என் கவனத்திற்கு வரவில்லை. தாழ்த்தப்பட்டவர்களுக்கு இலவசமாகவே வீடு கட்டிக் கொடுக்கும் திட்டம் இருப்பதால் அதன் மூலம் அவர்களுக்குத் தீர்வு காண முடியுமா என்று பார்த்து நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: வீட்டு வரியை மாற்றியமைக்க வந்த அதிகாரி ஒருவர், தனக்குக் கீழுள்ள பில் கலெக்டர் ஒருவரைப் பார்த்து, 'நான் இந்த வேலைக்கு அறுபதாயிரம் ரூபாய் லஞ்சம் கொடுத்து வந்திருக்கிறேன். எனவே, இந்த வார்டில் மட்டும் எனக்குப் பதினைந்தாயிரம் லஞ்சம் பெற்றுத் தர வேண்டும்' என்று சொல்ல, கேட்டவர் அதிர்ந்து போய் விட்டாராம். காரணம், அவர் அந்த வார்டில் வெறும் ஐயாயிரம் மட்டும்தான் 'கலெக்ட்' செய்திருந்தாராம்! இது நடந்தது அருப்புக் கோட்டையில்! மக்கள் சொன்னார்கள்.

கலெக்டர் (அருப்புக்கோட்டை முனிசிபல் கமிஷனரைப் பார்க்க, அவர் சொல்கிறார்): விசாரித்து உடனடியாக நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள நீராழி மண்டபத்தில் ஸ்ரீசிவ நாச்சியார் ஆரம்பப் பள்ளி என்ற பெயரில் தனியார் பள்ளி ஒன்று நடத்தப்படுகிறது. கட்டட நிலையோ எந்த நேரத்திலும் இடிந்துவிடும் அபாய நிலை. அதன் தலைமை ஆசிரியரைக் கேட்ட போது, 'இது பரவாயில்லை. இதை விட மோசமான பள்ளிகள் நிறைய இருக்கின்றன!' என்றதோடு, 'இது பற்றியெல்லாம் எழுதினால் எங்கள் பள்ளியின் நிர்வாகி ஓர் அ. தி. மு. க. பேச்சாளர் என்பதால் உங்கள் மேல் கேஸை போட்டு விடுவார்; ஜாக்கிரதை!' என்றும் எங்களை எச்சரித்தார்.

கலெக்டர்: விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன். (குறித்துக் கொள்கிறார்.)

கல்கி: சிவகாசிக்கு அருகிலுள்ள எம். துரைசாமிபுரத்திற்குச் சுமார் நான்காண்டுகளுக்கு முன்பு சுமார் இரண்டு மாதங்களுக்கு பி. ஆர். சி. பஸ் வந்ததாம். பிறகு ரோடு சரியில்லை என்று நிறுத்தி விட்டார்களாம். பின் மாற்றுச் சாலையில் கடந்த பொதுத் தேர்தல் சமயத்தில் நாற்பது நாட்களுக்கு பஸ் வந்து மறுபடியும் நின்று விட்டதாம். கேட்டதற்கு பர்மிட் இல்லையென்று சொல்லி விட்டார்களாம். அதன் பிறகு

# ஆனந்தம் நடமிடும் தீபாவளிக்கு அற்புதமான சேலைகள்

இந்த ஆண்டு தீபாவளிக்கு
புதிய ரக கோ-ஆப்டெக்ஸ்
வண்ணத் துணிகளைத்
தேர்ந்தெடுத்து வாங்குங்கள்

**20-45%**
பண்டிகைக்கால
சிறப்புத்
தள்ளுபடி



**கோ-ஆப்டெக்ஸ்**
கைத்தறி

DIPR / Efficient



## உங்கள் வாழ்க்கையிலே ஒரு பொன்னான வாய்ப்பினை உங்களுக்காகவே அளிக்கிறோம்.

- மின்சார ரயில் நிலையத்திலிருந்து 12 நிமிட நடை தூரம்
- அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனை திட்டம்.
- 5000 மத்திய அரசு ஊழியர் குடியிருப்பு திட்டத்தை அடுத்தது

சென்னை பீச் ஸ்டேஷனிலிருந்தும், பாரி முனையிலிருந்தும்

அடிக்கடி மின்சார ரயில் மற்றும் பஸ் போக்குவரத்து.

வற்றாத நிலத்தடி நீர். தண்ணீர் தேங்காத மனைப் பரப்பு.

# ஸ்ரீ முப்பாத்தம்மன் நகர்

DTP அங்கீகாரம் பெற்ற எண் CSAR/DTCPM86/217/LP176

கவர்ன்மெண்ட் பிளீடரிடமிருந்து சட்டக் கருத்து பெறப்பட்டது

முரளி அளிக்கும் அங்கீகாரம் பெற்ற மனைகள் பாங்கு காஷ் சர்டிபிகேட் போல உத்திரவாதமுள்ளவை. எந்நேரமும் உங்கள் அவசர தேவைக்கு மனைகள் எங்களிடமே திருப்பியளித்து உங்கள் மூலதனத்தை வாங்கிய தேதியிலிருந்து கவர்ச்சியான வட்டியுடன் திரும்ப பெறலாம்.

வண்டலூர் மிருககாட்சி சாலை அருகில். பொறியியல் கல்லூரி, சாட்டிலைட் டவுன் ஷிப் பள்ளிக்கூடங்கள், மருத்துவமனை, மற்றும் கூடுவாஞ்சேரி ரயில்வே நிலையத்திலிருந்து 12 நிமிட நடை தூரம். தேசீய நெடுஞ்சாலையை (G.S.T. ரோடு) அடுத்து மத்திய அரசு ஊழியர்கள் வீடு கட்டும் திட்டத்திற்கு அருகில்.

## 1800 சதுர அடி ரூபாய் 7,900 (III)

அட்வான்ஸ் ரூ. 500/- மீதி தொகை இரண்டு மாதத்தில் செலுத்தலாம்.
சுலபமான தவணை முறையிலும் கிடைக்கும்

19.10.86 அன்று பகல் 1.31 மணிக்கு மனைகளைப் பார்வையிட ரூ. 10/- முன் பணம் செலுத்தி பதிவு செய்து கொள்ளவும்.



## முரளீஸ் எஸ்டேட்'ஸ்

12, ராமசுவாமி தெரு, தியாகராயநகர்
சென்னை - 600017

அதே சாலையில் கடந்த பஞ்சாயத்துத் தேர்தலின் போது இருபத்திரண்டு நாட்கள் பஸ் வந்ததாம். அப்போது மட்டும் பர்மிட் விஷயம் எங்கே போனது?

கலெக்டர் (பி. ஆர். சி. கிளை மேலாளரைப் பார்க்க, அவர் சொல்கிறார்): உடனடியாக பர்மிட் கிடைத்துவிடும் என்றுதான் பஸ் விட்டோம். லேட்டானதால் மறுபடியும் நிறுத்தி விட்டோம். வேறு காரணங்கள் இல்லை.

கல்கி: எங்களால் நம்ப முடியவில்லை.

கலெக்டர்: கடந்த பதினைந்து ஆண்டுகளாகப் பஞ்சாயத்துத் தேர்தல் நடக்காத காரணத்தால் கிராமப்புற ரோடுகள் சரிவரப் பராமரிக்கப்படவில்லை. அதனால்தான் பஸ்கள் போகவில்லை. இனி சரியாகி விடும்.

கல்கி: ராஜபாளையம் முன்னாள் அ. தி. மு. க. எம். எல். ஏ. தனுஷ்கோடி, ஊராட்சி ஒன்றியக் கட்டடத்திற்கு அருகில் இரு மாடிக் கட்டடம் ஒன்றைக் கட்டித் தமது பெயரில் மாற்றிக் கொண்டிருக்கிறார். அதை வெறுங் கண்ணால் பார்க்கும்போதே நெடுஞ்சாலையை ஆக்கிரமித்திருப்பதாகத் தெரிகிறது. இல்லையெனில் நாங்கள் அதைப் படமெடுத்த போது, அவருடைய ஆட்கள் எங்கள் காமிராவைப் பிடுங்க வேண்டிய அவசியமில்லையே!

கலெக்டர் (நெடுஞ்சாலைத் துறை அதிகாரியைப் பார்க்க, அவர் சொல்கிறார்): அது நெடுஞ்சாலைப் புறம்போக்குக்குள் வரவில்லை. நத்தம் புறம்போக்கைச் சேர்ந்தது. அப்படியிருக்கும் போது நாங்கள் என்ன செய்ய முடியும்?

கல்கி: மேற்குத் தொடர்ச்சி மலையில் ஓடும் ஆற்றைக் கிழக்கு முகமாகத் திருப்பி அதிலிருந்து காமராஜர் மாவட்டத்திற்குக் குடிநீர் பெறலாம் என்கிறார்களே?

கலெக்டர்: எட்டுக் கோடி செலவில் அதற்காகத் திட்டம் இருக்கிறது. அதன் மூலம் சுமார் மூவாயிரம் ஏக்கர் பாசன வசதியும் பெறும்.

கல்கி: சிவகாசியிலுள்ள தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் பணிபுரியும் சுமார் 45,000 குழந்தைகளின் எதிர்காலத்திற்கு என்னதான் விமோசனம்?

கலெக்டர்: மாநில அரசு, உலகக் குழந்தைகள் நல நிறுவனம் ஆகியவற்றின் உதவியுடன் 1.36 கோடி செலவில் குழந்தைத் தொழிலாளர் நலன் பேணப்பட்டுக் கொண்டிருக்கிறது. அவர்களுடைய முறைசாராக் கல்விக்காகவும் மருத்துவமனையில் குழந்தைகள் நலப் பிரிவு அமைக்கவும் பல லட்சங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன.

கல்கி: குழந்தைத் தொழிலாளர் கொடுமைக்குக் காரணமே அக்குழந்தைகளின் பெற்றோர்களுடைய வாழ்க்கைத்தரம் மோசமாயிருப்பதுதான். எனவே, பெற்றோரின் வாழ்க்கையை உயர்த்தினால்குழந்தைத்தொழிலாளர்




திரும்பிப் பார்க்கிறோம்!
நினைவூட்டுகிறோம்!

மறுபடியும் மதுரை, பெரியார், தஞ்சை மாவட்டங்களுக்கு 'ரீ—விசிட்' செய்ய வருகிறோம். ஏற்கெனவே கல்கியில் வெளியான பிரச்னைகளுக்குத் தீர்வு காணப்பட்டிருக்கிறதா, இல்லையா?

உடனடியாக எழுதி அனுப்புங்கள்,
முடிவு தேதி: 20.10.1986.

— ஆசிரியர்

களும் ஒழிந்து விடுவார்கள். அதற்கு என்ன திட்டம் இருக்கிறது?

கலெக்டர்: ஐம்பத்திரண்டு லட்சம் செலவில் ஒரு பிரிண்டிங் பிரஸ் நிறுவ அரசு உத்தேசித்துள்ளது. மேலும் டெக்ஸ்டைல் மில்கள், தொழிற்பேட்டைகள் ஆகியவற்றைச் சுமார் இருபது கோடி செலவில் நிறுவிப் பெற்றோர்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்த உத்தேசித்துள்ளோம்.

கல்கி: அதிகமாகத் தீவிபத்து நடக்க ஏதுவான சிவகாசியில் தீயணைப்பு வண்டிகளின் கண்டிஷன் கூட நம்பகமானதாக இல்லையென்று சம்பந்தப்பட்டவர்களே எங்களிடம் கூறினார்கள்!

கலெக்டர்: ஆவன செய்கிறேன்.

கல்கி: மாநில அரசின் சிறுசேமிப்புத் திட்டத்திற்காகச் சிவகாசியில் வசூலிக்கப்படும் தொகைக்கு ரசீதே தரப்படுவதில்லையாமே, ஏன்?

கலெக்டர்: விசாரிக்கிறேன். அதோடு ரசீது தராவிட்டால் யாரும் பணம் செலுத்த வேண்டாமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

கல்கி: நாங்கள் ஆவுடையாபுரம் சென்றிருந்தபோது, கைக்குழந்தைகளிலிருந்து முதியோர் வரை பலர் கை, கால்கள் செயலற்றுப் போன முடக்குவாத நோயால் பாதிக்கப்பட்டிருந்ததைப் பார்த்தோம். இதே கதிதான் அப்பயநாய்க்கன்பட்டி, வீரார்பட்டி, மலைப்பட்டி மக்களுக்கும் என்றார்கள்!

கலெக்டர்: இதுவரை என் கவனத்திற்குக் கொண்டுவரப்படவில்லை. அந்த நோய்க்கான காரணத்தை ஆராய்ந்து களைய நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: அதே ஆவுடையாபுரத்தில் 272 குழந்தைகள் படிக்கும் நடுநிலைப் பள்ளிக்குக் கட்டடம் பாழடைந்து கிடப்பதால் இப் போது தாய் — சேய் நல விடுதியிலும், சத்து ணவுக் கூடத்திலும்தான் பள்ளி நடந்து கொண்டிருக்கிறது.

கலெக்டர்: அப்படியா? உடனடியாக ஆவன செய்கிறேன்.

கல்கி: அங்குள்ள சத்துணவுக் கூடமும் கட்டி மூன்றாண்டுகளுக்குள் தானாகவே இடிந்து கொண்டு வருகிறது!

கலெக்டர்: விசாரிக்கிறேன்.

கல்கி: கடந்த 29.7.58 இல் காமராஜ ரால் திறந்து வைக்கப்பட்ட தாய் — சேய் நல விடுதிக் கட்டடம் நல்ல கல் கட்டடமாக இருந்தும் அதைவிட்டு விட்டுப் புதிய தாய் — சேய் நல விடுதி கட்டிப் பணத்தை வீணடித் ததற்கு என்ன காரணம்?

கலெக்டர்: இதெல்லாம் அரசின் கொள்கை சம்பந்தமான விஷயம். நான் எதுவும் சொல்வதற்கில்லை!

கல்கி: ராஜபாளையத்தில் அரசாங்க டவுன் பஸ்கள் விடாததற்குக் காரணம், தனியார் பஸ் முதலாளிகள் சம்பந்தப்பட்ட வர்களைக் 'கவனித்து'க் கொள்வதுதான் என்கிறார்களே?

கலெக்டர்: இது என் கவனத்திற்கும் கொண்டு வரப்பட்டது. விரைவில் பி. ஆர். சி. பஸ்கள் விட உள்ளோம்.

கல்கி: ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மாரி யப்பன் என்பவரது தாயார் ஆறுமுகத் தம்மாள் தாய் — சேய் நல விடுதி ஆயாவாக வேலை பார்த்து கடந்த 80 ஆம் ஆண்டு மரணமடைந்துவிட்டார். ஆனாலும் இன்று வரை அவர் குடும்பத்திற்குச் சேர வேண்டிய குடும்பநலத் திட்டத் தொகையான பத்தாயிர மும் கிராஜுட்டி, பென்ஷன் ஆகியவையும் வந்துசேரவில்லையாமே?

கலெக்டர்: உடனடியாக விசாரித்து ஆவன செய்கிறேன்.

கல்கி: காமராஜர் மாவட்டமே கரிசல் மண் பூமியாதலால் சாலை வசதிகள் பக்கா வாக இருக்க வேண்டும். ஆனால் சாலைகள் எல்லாமே மிக மோசமாகத்தானே இருக் கின்றன?

கலெக்டர்: ஒவ்வொரு சாலையாகப் பழுது பார்த்துப் புதுப்பித்துக் கொண்டுதான் வரு கிறோம்.

கல்கி: கடந்த அருப்புக்கோட்டை இடைத் தேர்தலின் போது தும்பச் சின்னம்பட்டியில் நடந்த தலையாரி விஜயரங்கன் கொலை, போலீ ஸாரின் அஜாக்கிரதையால்தான் நடந்திருக் கிறது. இல்லையா?

கலெக்டர் (மாவட்டக் காவல் துறை கண் காணிப்பாளரைப் பார்க்க, அவர் சொல் கிறார்): உண்மைதான். அதனால்தான் சம்பந் தப்பட்டவர்களை சஸ்பெண்ட் செய்திருக்கி றோமே!

கல்கி: சஸ்பெண்ட் செய்து விட்டால் மட் டும் அந்தத் தலையாரியின் உயிர் திரும்ப வந்து விடுமா? போலீஸாரே இப்படி அஜாக் கிரதையாக இருக்கலாமா?

காவல்துறை கண்காணிப்பாளர்: இருக் கக் கூடாதுதான். தவறு நேர்ந்து விட்டது. இப்போது நடவடிக்கை எடுப்பது தவிர வேறு என்ன செய்ய முடியும்?

கல்கி: அருப்புக்கோட்டை இடைத் தேர் தலுக்காக அந்தத் தொகுதியில் எத்தனை 'போர் வெல்'கள் போடப்பட்டிருக்கின்றன என்று உங்களால் சொல்ல முடியுமா?

கலெக்டர்: ஸாரி! நோ கமெண்ட்ஸ்!

கல்கி: இதை நீங்கள் சொல்லாவிட்டாலும் கூடத் தேர்தல் சமயத்தில் விடப்பட்ட பஸ் களும், அங்கங்கே அவசர அவசரமாகத் திறந்து வைக்கப்பட்ட மருந்தகம், மருத்துவ மனைகள் ஆகியவையும் உண்மையைச் சுட்டிக் காட்டுகின்றனவே!

கலெக்டர்: (மௌனம்)

கல்கி: மாவட்டங்களில் நடத்தப்படுகிற விழாக்களில் எதிர்க்கட்சியினரும் அழைக்கப் பட வேண்டும். அவர்களுடைய பெயர் களும் அழைப்பிதழில் இடம்பெற வேண் டும். ஆனால் இது காமராஜர் மாவட்டத்தில் அறவே புறக்கணிக்கப்படுவது ஏன்?

கலெக்டர்: அரசு விழாக்களில் அனைவரு டைய பெயர்களும் இடம் பெறுகின்றன. சில சமயங்களில் அவசரத்தில் சிலர் பெயர் விடுபட்டுப் போய்விடும். அவ்வளவே!

கல்கி: காமராஜர் மாவட்டத்தில் டூரிஸ்டு களைக் கவர்கிற இடமாக எதுவும் இல்லையே? அதற்கு ஏதும் திட்டம் உண்டா?

கலெக்டர்: உண்மைதான்! பிளவக்கல் அணையைத்தான் சுற்றுலா மையமாக்குவதற் கான ஏற்பாடுகளைச் செய்து கொண் டிருக்கிறோம்.

கல்கி: விருதுநகர் மக்களுக்கு சினிமாவுக்கு அடுத்தபடியாக உள்ள ஒரே பொழுது போக்கு பூங்காவாகத்தான் இருக்க முடியும். ஆனால் நகரிலுள்ள பெரிய பூங்காவான வி. என். பி. ராமசாமி நாடார் பூங்கா தரிசாக வல்லவா காட்சியளிக்கிறது!

கலெக்டர்: கூடிய சீக்கிரம் அதை ரோட்டரி கிளப் தனது பராமரிப்பில் எடுத்துக் கொண்டு டீ. வி. செட் போன்ற வற்றை வைத்து அழகுபடுத்த இருக்கிறது.

கல்கி: கடைசியாக ஒன்று. நீங்கள் சாதா ரணமாகப் பொது மக்களிடம் பேசுவதே இல்லையாம். எதற்கெடுத்தாலும் தலையை மட் டும்தான் ஆட்டுகிறீர்களாம். பொது மக்கள் இதை ஒரு குறையாகச் சொல்கிறார்கள்!

கலெக்டர் (சிரிக்கிறார்): நான் சொற்களை விடச் செயல்களையே அதிகம் விரும்பு கிறேன். அதனால் பொது மக்கள் அதையொரு குறையாக எடுத்துக் கொண்டாலும் நான் கவலைப்படப் போவதில்லை.



# நெருப்பாக நீ

ஜனார்த்தனம், மறுபடியும் தம் கையிலிருந்த மகளின் கடிதத்தைப் படித்துப் பார்க்கிறார்...

இதோடு குறைந்தது நூறு முறையாவது படித்திருப்பாரா...? இருக்கும்!

முதல் தடவையாக அந்த மனிதரின் மனத்தில் கவலை ஜனிக்கிறது...

'அப்பா... உடனே புறப்பட்டு வாருங்கள். அவசரம்... வரும்போது எனது பூர்வாசிரமம்— அதாவது — என்னைப் பெற்றெடுத்த புண்ணியவான்களைப் பற்றிய விவரமோ, அல்லது என்னை அநாதை ஆசிரமத்தில் சேர்த்தவர்களைப் பற்றிய தகவலோ — ஏதாவது இருந்தால் கையுடன் எடுத்து வரவும். எனக்கு, 'நான் யார்?' — என்பது தெரிய வேண்டும்... மீண்டும் நினைவுபடுத்துகிறேன்... இது அவசரம்... இப்படிக்கு என்றும் உங்கள் இன்பா...'

இதுநாள் வரையில் அவள் தன்னைப் பற்றிய விவரங்களைக் கேட்டதே இல்லை...

ஓரளவுக்கு நினைவு தெரிய வரும்போதே இன்பாவுக்கு ஜனார்த்தனம் தம்பதியர் தன்னைப் பெற்றவர்கள் இல்லை என்பது தெரியும்.

அதற்காக அவள் வருத்தப்பட்டதில்லை; கலங்கியதில்லை; கண்ணீர் விட்டதில்லை...

ஜனார்த்தனத்தின் சுபாவமான — எதையுமே லேசாக எடுத்துக் கொள்ளும் பரிபக்குவம் அவளுக்கும் படிந்து விட்டது...

''அநாதைகளிலேயே நான், அதிர்ஷ்டம் செய்த அநாதை...''

இப்படிச் சொல்லிச் சிரிப்பாள்.

அப்பேர்ப்பட்டவள், இன்று தன்னைப் பற்றிய விவரம் கேட்கிறாள் என்றால்...

என்ன காரணமாயிருக்கும்...?

ஒருவேளை — நந்துவை, இவள் மணப்பதாக முடிவு செய்து, அதை அவன் தன் பெற்றோரிடம் தெரிவித்து இருப்பானோ...?

ஏற்கெனவே — அவன், ஜமீன் பரம்பரையைச் சேர்ந்தவன் என்று சொல்லியிருக்கிறான்... இப்போது, அவனது பெற்றோர் — அநாதைப் பெண்ணை மருமகளாக ஏற்க யோசிக்கிறார்களோ...?

அட கடவுளே... இரண்டு மனம் ஒன்றுபட்டபின், அல்பமான ஜாதி, மத, பாகுபாட்டினாலோ — அநாதை என்ற காரணத்தினாலோ இந்தக் கல்யாணத்தை முறியடித்து விடாதே!

அவர் மனசு, இல்லாததை எல்லாம் எண்ணிக் கலங்குகிறது...

இன்பாவிற்கு ஓர் ஏமாற்றம் வந்தால் — அதை அவரால் தாங்க முடியாது... சத்தியமாய் முடியாது...

'இந்தப் பெண், இன்னும் கொஞ்சம் விவரமாக எழுதித் தொலைக்காதோ...?'

சாதாரணமாய், மகளிடமிருந்து கடிதம் வராவிட்டால், உடனே பதறியடித்துப் பறக்கிற ரகமில்லை அவர்.

அவருக்குத் தெரியும், தம் மகள் — கடிதம் எழுதச் சோம்பேறித்தனப் பட்டுக்கொண்டு எழுதாமலிருக்கிறாளே தவிர, அவளுக்கு எந்தவிதத்திலும் தீங்கு வராதென்று அவருக்குத் தெரியும்.

ஓரிரு முறை இன்பா விபத்துக்களில் சிக்கிக் கொண்ட போதும், கடுமையான காய்ச்சலில் படுத்து 'இனி பிழைப்பது துர்லபம்' என்று, டாக்டர்கள் கெடு வைத்த போதும்கூட, அவள் தப்பிப் பிழைத்து விட்டாள் என்றால்... அதற்குக் காரணம், கண்ணுக்குப் புலப்படாத ஏதோ ஒரு சக்திதான்.

அந்தச் சக்தி தன் மனைவியின் பாசம் மிகுந்த ஆத்மாதான் என்பதை, அவர் பரிபூரணமாக நம்புகிறார்.

'அவ, ஆசைப்பட்டு எடுத்துட்டு வந்த குழந்தை... இருந்த வரைக்கும் கண்ணுக்குள்ளே வச்சு, இமையாலேதான் மூடினா... இப்பவும், அவ தெய்வமா இருந்து, அவளைக் காப்பாத்தணும்...'

அவர், இன்பாவைப் பற்றிய பழைய குறிப்புகள் அடங்கிய ஃபைலைத் தமது பீரோவிலிருந்து எடுத்து, புரட்டிப் பார்க்கிறார்...

ஆசிரமத்து நிர்வாகியின் சாய்ந்த கையெழுத்துடன் கூடிய, டைப் செய்யப்பட்ட காகிதங்கள்... குழந்தையை இவர்களிடம் கொடுக்கும் முன் எடுத்த புகைப்படத்தின் ஒரு பிரதி...

நெற்றியிலும், கன்னத்திலும் பெரிய கறுப்புப் பொட்டுகளும், வழிய வழிய எண்ணெய் தடவி உச்சந்தலையில் இழுத்துப் பின்னிய கொடுக்குப் பின்னலும், வார்டன் ஆசையுடன் வாங்கிச் சூட்டிய கதம்பமும், மிரண்ட பார்வையுமாய்...

ஜனார்த்தனத்தின் இதழ்க்கடையில் மெல்லிய முறுவல் படருகிறது...

குழந்தையை வீட்டுக்குக் கொண்டு வந்த புதிதில், மனைவியின் திருப்திக்காக, அதை நுனி விரலால் தொடுவாரே தவிர — மனசுக்குள் எத்தனை ஒட்டாத் தன்மையுடன் இருந்திருக்கிறார் அவர்.

இந்தக் குழந்தையா... இதுவா என் வாரிசு...?

ஆனால் இப்போது?

எப்படி இத்தனை பாசமும், பற்றும் வந்தது... அவர் மனைவி, அடிக்கடி சொன்ன வார்த்தைகள்தான் நினைவுக்கு வருகிறது...

வெண்கலக் குத்து விளக்கை, உபயோகப் படுத்தாம, பரண் மேல தூக்கிப் போட்டா, களிம்பேறி, பச்சை படர்ந்துதான் கிடக்கும்... அதையே நல்லாத் தேய்ச்சு, அஞ்சு முகமும் ஏத்தி வச்சா — தங்கம் தோத்துப் போகும்... குழந்தைங்க கூட அப்படித் தாங்க... அன்பும், அரவணைப்பும் கிடைக்காத குழந்தைங்கதான் வாழ்க்கையில வக்கரிச்சுப் போகுதுங்க... அத்தனை பாசமும் கிடைக்கிற குழந்தைங்க, அறிவாளிகளா, ஏன் இந்த நாட்டையே வழி நடத்தக் கூடிய சாமர்த்தியசாலிகளா ஆகுதுங்க...

'இப்ப மட்டுமில்லே... எப்பவும் சொல்லுவேன் — வறண்ட பூமிதான் தண்ணிய வேகமா உள்ளே இழுத்துக்கும்...'

எத்தனை தீர்க்கதரிசி அவள்...

அவர், தம் கையிலிருந்த பழுப்பு நிறக் காகிதத்தில் கண்களை ஓட்டுகிறார்.

குழந்தையின் பெயர்: சரியாய்த் தெரியவில்லை... குழந்தையை ஆசிரமத்தில் கொண்டு விட்டவர்கள் பாப்பா என்றே அழைத்தார்கள்... ஆசிரமத்துப் பெயர் லட்சுமி...

வயது: சுமார் ஒன்றரை முதல் இரண்டு வயதுக்குள் இருக்கும்.

விடுதியில் கொண்டு வந்து விட்டவர்கள்: குழந்தையின் தகப்பன் வழி உறவினர்கள்.

விடுதியில் சேர்க்கக் காரணம்: தாயில்லாக் குழந்தைக்கு ஒரே ஆதரவாய் இருந்த தந்தையும் இறந்து விட்டதால்... மேற்படி குழந்தை — தஞ்சாவூர் அருகிலுள்ள கிராமத்தில் கட்டட வேலை செய்து கொண்டிருந்த நல்லசிவம் என்பவரின் ஒரே மகள் என்று, உறவினர்களின் வாக்குமூலத்தினால் தெரிய வருகிறது...

'மேற்படி குழந்தை மீது உரிமை கொண்டாடவோ, யாரேனும் சுவீகாரம் எடுத்துக் கொண்டால், அவர்களுக்கு எந்த விதத்திலும் தொந்தரவு தரவோ மாட்டோம் என்பதையும் இதன் மூலம் தெரிவிக்கிறேன்.'

— இப்படி எழுதிய காகிதத்தில் யாரோ ஒரு படிப்பறிவில்லாத மனிதரின் கைநாட்டும் பதிய வைத்த காகிதம்...

ஜனார்த்தனத்தின் நெஞ்சுக்குள் சின்னப் பொறி...

'இப்ப இவ போயிருக்கிற கிராமமும், இவளோட சொந்த ஊரும் ஒண்ணு தானோ...'

'மாயவரம் பக்கத்துல அந்தப் பேர் கொண்ட கிராமம் அது ஒண்ணுதான் போலிருக்கே...'

ரயில் அட்டவணையைப் புரட்டிப் பார்த்தவரின் புருவம் முடிச்சிடுகிறது...

'இத்தனை வருஷமா இல்லாம, இப்ப, உன்னோட உறவு'ன்னு சொல்லிட்டு, எந்த காத்தான், கறுப்பனாவது புறப்பட்டிருப்பானோ...'

அவர், அதற்குமேல் தாமதிக்கவில்லை. மளமளவெனக் கிளம்பி விட்டார்.

விடிகாலை நேரத்தில் — சில மாதங்களுக்கு முன் இன்பாவையும், நந்துவையும் வரவேற்ற அதே சின்னஞ்சிறு ஸ்டேஷன், ஃப்ளாட்ஃபார ஓரத்தில் செக்கச் சிவக்கப் பூத்திருக்கும் அதே கல்யாண முருங்கை மரத்தின் தலையசைப்புடன் இவரை வரவேற்க...

ஸ்டேஷனில் நமது பிரசித்தி பெற்ற ஸ்டேஷன் மாஸ்டர் இல்லை... வேறொரு முப்பது வயசுக்காரர், பட்டணக் களையுடன் வந்திறங்கும் ஜனார்த்தனத்தை ஆச்சரியத்துடன் பார்த்தபடி, டிக்கெட்டை வாங்கிக் கொள்ள...

"ஜமீன்தார் லோகநாதன் வீட்டுக்கு இங்கேயிருந்து ஏதாவது வண்டி கிடைக்குமா..."

இவரது கேள்வி, ஸ்டேஷன் மாஸ்டரின் முகத்தில் மேலும் திகைப்பை அப்புகிறது.

"சார் யாரோ?"

"ஸ்டேஷன் மாஸ்டரின் கேள்விக்கு ஒரு கணம் தயங்கிய ஜனார்த்தனம் — என்ன நினைத்துக் கொண்டாரோ, இன்பாவின் பெயரை உபயோகிக்காமல், பொதுப் படையாகச் சொல்கிறார்:

"ஜமீன்தாருக்கு வேண்டியவர்..."

"ந்சு... ந்சு..."

தனக்குள் ஒரு வினாடி எதற்கோ வருத்தப்பட்ட ஸ்டேஷன் மாஸ்டர், யாருமே இல்லாத அந்த ஸ்டேஷனில் கூட, யாரோ— தாம் சொல்வதை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருப்பது போன்ற பாவனையுடன், பரம ரகசியமாய்ச் சொல்கிறார்.

"ஜமீன்தார் இப்ப... அதாவது நேத்து தான் அரெஸ்டாகி லாக்-அப்லே இருக்கார்..."

ஜனார்த்தனம் திடுக்கிடுகிறார்.

"ஐயோ... ஏன்..."

"என்னவோ போங்க சார்... எதுவுமே சொல்ற மாதிரி இல்லே... சார், ஜமீன்தாருக்கு ரொம்ப குளோஸ் ஃபிரண்டோ?"

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. நீங்க, விஷயத்தைச் சொல்லுங்க..."

"அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும்னு சொல்வாங்க. இருபது வருஷங்களுக்கு முன்னாலே ஜமீன்தார், தன் மூத்த தாரத்தைக் கொலை செஞ்சு மறைச்ச விஷயம் — நேத்திக்குத் தெரிய வந்திருக்கு சார்... அதுவும்— அவரோட மகனோட லவ்வராலே..."

பேச்சே எழும்பாமல் நிற்கிறார் ஜனார்த்தனம்.

இன்பாவா...

அவளுக்கு என்ன தெரியும்...?

இது என்ன புதுத் தொல்லை...

அவரை யோசிக்க விடவில்லை ஸ்டேஷன் மாஸ்டர்.



''சார், நீங்க ஜமீன்தாரைப் பார்க்கணும்னா — நேரே டவுன் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போங்க... அவரோட ரெண்டாவது சம்சாரத்தையும், அவர் பிள்ளையையும் பார்க்கணும்னா — பங்களாவுக்கே போங்க. இதுல பாருங்க, ஜமீன்தாரிணியைக் கொல்லத் திட்டம் போட்டுக் கொடுத்தது — எங்க ஊர் டாக்டரையும், ஸ்டேஷன் மாஸ்டரையும் கூட அரெஸ்ட் பண்ணியிருக்காங்க... இதுல, ஸ்டேஷன் மாஸ்டர், அப்ரூவரா மாறிட்டாரு... இத்தனை நாளும் பேசாம இருந்த இளைய ஜமீன்தாரிணி புவனேஸ்வரி — டாக்டர் மேல் ஏகப்பட்ட குற்றச்சாட்டுக்களைச் சுமத்தியிருக்கா...''

''இப்ப அந்தப் பொண்ணு எங்கே இருக்கா...?''

''யாரு... அந்தப் பையனோட லவ்வரா... எங்கே போவா? அதே வீட்டுலதான் இருக்கா... போலீஸ் வந்து டெட் பாடியை எடுக்கிற முயற்சியில ஈடுபட்டிருக்கு. ஏன் சார்... இருபது வருஷங்களுக்கு அப்புறம் என்ன கிடைக்கும்...?''

ஜனார்த்தனம், ஸ்டேஷன் மாஸ்டரை நிமிர்ந்து பார்க்கிறார்.

''ஏன்... எலும்புக் கூடு கிடைக்கும்...''

இதைச் சொல்லிவிட்டு, அவர் வேகமாய் ஸ்டேஷனை விட்டு வெளியே வருகிறார்...

கண்ணில்பட்டசொகுசானமாட்டுவண்டியின் பக்கத்தில் போய் நிற்கிறார்.

''இங்கேயிருந்து ஜமீன்தார் வீட்டுக்குப் போகணும்... என்ன கேட்கறேப்பா...''

வண்டியோட்டி, அவரை ஏற இறங்கப் பார்க்கிறான்.

''ஒன்னே ஒண்ணுதாங்க கேட்கணும்... நீங்கதான் இன்பாம்மாவோட அப்பாவா?''

''அட... உனக்கு எப்படிப்பா தெரியும்?''

''அவங்கதான் சொல்லி அனுப்பினாங்க. என் பேரு மாதையங்க... மாதுன்னு கூப்பிடுவாங்க... ஜமீன்தார் வீட்டுல ரொம்ப வருஷமா வண்டியோட்டிட்டிருக்கேன்... உங்க மக இன்பா — என் குல தெய்வத்துக்குச் சமமுங்க...''

மாதையன் கண்ணீர் ததும்ப, அவரது கைப்பெட்டியை வாங்கி வண்டியில் வைக்க, ஜனார்த்தனம் ஒன்றும் புரியாதவராய் வண்டியில் ஏறி அமர —

வண்டி சிட்டாய்ப் பறக்கிறது...

வண்டியின் வேகத்தை விடவும் துரிதமாய், மாதையன் நடந்ததைச் சொல்கிறான்.

இப்போது ஜனார்த்தனத்துக்கு, ஒன்று தெளிவாய்ப் புரிந்து விட்டது...

இன்பா — ஜமீன்தார் வீட்டு மேஸ்திரி நல்லசிவத்தின் மகள்...

அதுசரி... மங்களாம்பாள் இறந்த போது — அவள் ஒன்றரை வயதுக் குழந்தையாக அல்லவா இருந்திருப்பாள்...

அவளுக்கு எப்படி இந்தக் கொலையைப் பற்றித் தெரிந்திருக்க முடியும்...?

(அடுத்த இதழில் முடியும்)

# நாசூக்காகச் சொல்லிவிட்டீரே!

* சமீப காலமாக நீங்கள் வெளியிடும் உண்மைக் கதைகள் பயனுள்ளவையாய் இருக்கின்றன. சித்திரக் கதை பாணியும் தொடரட்டும்.

திருச்சி — 1, பாலா. அசோக்.

* 5.10.86 இதழில் எஸ். வி. சேகர் பற்றிய செய்தியைப் படித்து அதிர்ந்தேன். நாடகத்தைப் பாதியிலேயே நிறுத்திவிட்டது பெரும் தவறு என்று கண்டிருந்தது. ஆனால் எக்காரணம் கொண்டும் நாடகம் பாதியில் நிறுத்தப் படவில்லை. நாடகம் முடியும் முன்பாக மேடையில் தோன்றி, எஸ். வி. சேகர் நிலைமையை விளக்கினார். போலீஸிடம் விஷயம் சொல்லப் பட்டது. ஆனால் இன்னும் அந்த நபர் கிடைக்கவில்லை. ஒரு கலைஞனை ஏமாற்றிய அந்த 'வால் பையனை'க் கடுமையாகக் கண்டிப்பதற்குப் பதில், தவறான தகவலின் அடிப்படையில், எஸ். வி. சேகரைக் குறை கூறியிருப்பது மாபெரும் தவறு.

ஈரோடு — 1, என். பூபதிராஜா.

* 5.10.86 கல்கியில் இடம் பெற்ற எஸ். வி. சேகர் பற்றிய துணுக்கை 2.9.86 தினத்தந்தியில் (சேலம் பதிப்பு) வெளியான செய்தியின் அடிப்படையில்தான் எழுதினேன். அதன் நகலை இத்துடன் இணைத்து அனுப்புகிறேன்.

சேலம், நவபாரதி.

* இந்தியை எதிர்த்து கருணாநிதி தூண்டும் கிளர்ச்சி பயனில்லாதது என்பதைத் தலையங்கத்தில் நாசூக்காகச் சொல்லி விட்டீரே!

கவுந்தப்பாடி. ராம்தினகர்.

* கல்கி 28.9.86 இதழில் "பெண்கள் வேலைக்குப் போவதால்..." என்ற பட்டி மன்றம் படித்தேன். வேலைக்குப் போகும் பெண்கள் என்றால் ஆபீசுக்குப் போகும் பெண்கள் மட்டும்தானா? காய்கறி, பால் வியாபாரம் செய்யும் பெண்கள், கட்டட வேலை செய்வோர், வயல்களில் வேலை செய்வோர் வீட்டு வேலை செய்வோர் போன்றவர்களைப் பற்றி ஏன் யாரும் எதுவும் பேசவில்லை? இவர்கள் ஒரே ஒருநாள் வேலை செய்யாதிருந்தால் இந்த நாட்டின் கதி என்ன ஆகும்? பெண்கள் வேலைக்குப் போவதால் கஷ்டப்படுவோர் அப்பெண்கள்தானே தவிர அப்பெண்களைச் சுற்றியுள்ளவர்கள் அல்ல.

சேலம் — 2, எம். கே. ரத்னம்.

* இந்தி கற்க வேண்டும் என்று நான் திரிப்பந்துப் படுத்தவில்லை என்று வழக்கம் போல் பிரதமர் கூறியவுடன் மற்ற சில பத்திரிகைகளைப் போலக் கண்மூடித்தனமாகப் பாராட்டாமல் உடன் சட்டரீதியாக உறுதி தர வேண்டும் என்று தீர்க்கமாக எழுதிய கல்கி தலையங்கத்தை மனம் திறந்து பாராட்டாமல் எப்படி இருக்க முடியும்?

ஆங்கரை. ஆனந்.

* ஆகஸ்டு 3, கல்கி இதழில் எங்கள் சபையின் பெயர் 'வித்யா மியூஸிக் டிரையாங்கிள்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பம்பாயின் மேற்குப் புறநகர்ப் பகுதியில் உள்ள சபைகள் இரண்டு; ஒன்று 'கான கலா வித்யா நிலையம். மற்றது 'மியூஸிக் டிரையாங்கிள்.' இந்த இரு சபைகளுமே நுண்கலைகளை அதன் தூய்மை கெடாமல் காப்பதில் பெரும் பணியாற்றி வந்துள்ளன. கோரேகானிலுள்ள கான கலா வித்யா நிலையம், இந்த ஆண்டுத் தொடக்கத்தில் வெள்ளி விழா கொண்டாடியது. இசை வகுப்புக்களைச் சிறப்பாக நடத்தும் இந்தச் சபாவுக்குச் சொந்தக் கட்டடம் இருப்பதானது பம்பாயில் ஓர் அரிய சாதனையல்லவா?

பம்பாய் — 62, ஆர். எம். சிதம்பரம்.
தலைவர், கான கலா வித்யா நிலையம்.

* மாதம் ஒரு மாவட்டம் என்னும் பகுதியில் பெயருக்காகச் சில மாவட்டங்கள் சென்று, அங்குள்ள நிறை குறைகளைச் சுட்டிக் காட்டி எழுதுவதோடு நிறுத்திக் கொள்ளாமல், அக்குறைகள் நிவர்த்தி செய்யப்பட்டு வருகின்றனவா என்பதை அறிந்து கொள்ளும் பொருட்டு மறுபடியும் போய்ச் சோதனை செய்யும் முயற்சி வரவேற்கத்தக்கது.

திருச்சி — 16, எஸ். ராஜகோபால்.

* இந்திய அரசு வெளியிட்டுள்ள ஐம்பது ரூபாய் நோட்டில் சம்ஸ்கிருதத்தில் குறிப்பிடும்போது முறைப்படி 'பஞ்சாசத்' என்றுதான் அச்சாகியிருக்கிறது. 'பஞ்ச சதம்' என்றல்ல. 'பஞ்சாசத்' என்றால் ஐம்பதுதான். பஞ்ச சதம் என்றால் 500. ஐம்பதைக் குறிக்க 'பஞ்ச தசம்' என்ற வார்த்தை சம்ஸ்கிருத வழக்கில் இல்லை.

தூத்துக்குடி — 7, ஏ. வி. ராமநாதன்.

* இந்த இதழில் வெளியான மூன்று சிறுகதைகளுமே முத்தாக ஒளிர்ந்தன. அதிலும் 'இப்படியும் ஓர் அப்பா' இதயத்தைச் சற்று பலமாகத் தாக்கியது.

மதுரை — 20, எஸ். ஜெ. இதயா.

* 'கல்கி' 5.10.1986 இதழில் வாசகர் பட்டி மன்றம் பகுதியில் 'இ. காங்கிரஸ் கட்சிக்கோ தற்போதுதான் 'பாரதம்' என்ற நாளேடு வெளிவரத் துவங்கியுள்ளது. அதுவும் இப்போது காணாமல் போய்விட்டது' என்று வெளியிட்டிருப்பது சரியல்ல. 'பாரதம்' தமிழ் நாளேடு தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

சென்னை — 24, மு. லட்சுமணன்.

* நீதிபதி பத்மினி ஜேசுதுரையின் பேட்டி விறுவிறுப்பாகவும் விறுவிறுப்பாகவும் இருந்தது.

கும்பகோணம், வை. சரவணகுமார்.



# காமராஜர் மாவட்டம் முன்னேற...

**அருப்புக்கோட்டை எம்.எல்.ஏ. பஞ்சவர்ணம் கூறுகிறார்:**

ராமநாதபுரம் மாவட்டம் என்றாலே பின்தங்கிய மாவட்டம் என்று பெயர் எடுத்துவிட்ட காரணத்தால், அந்த மாவட்டத்து மக்களின் பொருளாதார மேம்பாட்டுக்காகவும், நிர்வாக வசதிக்காகவும் முதல்வர் அந்த மாவட்டத்தை மூன்று மாவட்டங்களாகப் பிரிக்க உத்தரவிட்டார். பிரிக்கப்பட்ட மூன்று மாவட்டங்களில் காமராஜர் மாவட்டம் மிகவும் பின்தங்கிய பகுதி. விவசாயத்தை நம்பி இருப்பதால் மழை வருடக் கணக்கில் பொய்த்துப் போகும்போது எங்கள் மக்கள் பஞ்சம் பிழைக்க இடம் பெயர்ந்து போவது சகஜம்.

ராஜபாளையம் பகுதியில் பருத்தி நிறைய விளைவதால் தனியார் துறையில் நிறைய நூற்பாலைகள் உள்ளன. சிவகாசியில் பட்டாசுத் தொழிற்சாலைகளும் அச்சகங்களும் நிறைய வேலை வாய்ப்பைக் கொடுக்கின்றன. சுற்றுப்புறங்களில் விளையும் மிளகாய், நெல், எள், பருத்தி ஆகியவற்றை விற்க விருதுநகரில் பெரிய மார்க்கெட் இருக்கிறது. அது மக்களுக்கு வேலை வாய்ப்பைக் கொடுக்கிறது. எள் அதிகமாக விளைவதால் விருதுநகரில் தனியார் எண்ணெய்க் கம்பெனிகளும் இருக்கின்றன. சாத்தூர் மக்கள் தீக்குச்சித் தொழிலையே நம்பி இருக்கின்றனர். ஆனால் அருப்புக்கோட்டையைச் சார்ந்த மக்களுக்கு விவசாயத்தைத் தவிர வேறெந்தத் தொழிலும் தெரியாது. அ. தி. மு. க. ஆட்சிக்கு வந்த பின்னர்தான் விசைத்தறிச் சங்கங்கள் நிறைய தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இப்போது கூட்டுறவுத் துறையில் ஒரு நூற்பாலை கொண்டு வர முயற்சி செய்கிறோம். அது வந்தால் இரண்டாயிரம் பேருக்கு வேலை கிடைக்கும்.

நிறைவேற்றப்பட வேண்டிய நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறையவே உள்ளன. சென்னம்பட்டி அணைக்கட்டும் அணைக்குளம் அணைக்கட்டும் குண்டாற்றின் குறுக்கே கட்ட இருக்கிறார்கள். இந்த ஆறு ஒரு காட்டாறுதான். ஆனால் திடீர் திடீரென்று வரும் வெள்ளத்தில் எக்கச்சக்கமாக தண்ணீர் வீணாகிப்போகிறது. ஆகவேதான் இந்தத் திட்டங்கள். இவை மூலம் பதினைந்து கிராமங்களில் இருபதாயிரம் ஏக்கர்கள் பயன்பெறும். தவிர கம்பிக்குடி கால்வாய்த்திட்டம் என்பதாக ஒரு திட்டம் தீட்டப்பட்டுள்ளது. மேலும் முதல்வர் அருப்புக்கோட்டை எம். எல். ஏ.வாக இருந்தபோது, கிருத்திகா நதி திட்டம் பற்றி யோசித்திருக்கிறார். வைகை நதியிலிருந்து பிரியும் கிருத்திகா நதியில், மதுரைக்கருகில் கரைகளில் வீடுகள் கட்டப்பட்டு நதியே மறைந்து போனது! அந்தப் பகுதியில் கால்வாய் வெட்டப்பட்டு கிருத்திகா நதியும் வைகையும் இணைக்கப்பட இருக்கின்றன. இதனால் 25,000 ஏக்கருக்குப் பாசன வசதி கிடைக்கும்.

தொழில்கள் ஏதும் துவங்க முடியுமா என்றும் ஆய்வு நடந்து கொண்டிருக்கிறது. காரியாப்பட்டியில் சிமெண்ட் தயாரிக்க உதவும் சுண்ணாம்புக் கற்கள் நிறையக் கிடைக்கின்றன. ஏற்கெனவே தனியார் துறையிலும், அரசுத் துறையிலும் சிமெண்ட் தொழிற்சாலைகள் இருக்கின்றன. காரியாப்பட்டியில் இன்னொன்று கொண்டு வர முடியுமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறோம். ஆறு கோடி ரூபாய் மூலதனத்தில் சிறிய, சிறிய அளவில் ரசாயனத் தொழிற்சாலைகளைத் தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவனத்தின் மூலம் துவங்கவும் திட்டம் இருக்கிறது.

மேற்கண்ட தொழில்களும் நீர்ப்பாசனத் திட்டங்களும் நிறைவேற்றப்பட்டால், காமராஜர் மாவட்டம் பொருளாதாரத்தில் உயர்ந்தோங்கி மக்கள் வாழ்க்கை செழிக்கும்.

தொகுப்பு: **ப்ரியன்**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

பண்டிகையின் உற்சாகம்
பன்மடங்கு பெருகிடவே
பாங்காகவே அணிந்திடுவீரே
சாரதா'ஸின் புதிய டிசைன்களையே.

என்றும் யௌவனத்துடன் விளங்க

# தருணி

பிரகாசம் பொருந்திய அழகிற்கு

# தேஜோவதி

# சாரதாஸ்

(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)

தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன் : 87177

N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன் : 27077



